உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 40 துன்மதி ஆண்டு சித்திரைத்திங்கள் 10—5—81 இதழ் 6

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

## குருபூஜை விழா 24-5-81

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ
குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—[⋆]—

என்செயலே என்றென்
 றியற்றுவதும் என்செயலும்
உன்செயலே என்றென்
 றுணர்த்துவதும் — நின்செயல
தாகுமே என்ன அடியேற்
 குணர்த்தலும்நீ
ஆகுமே சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா. 76

ஆசிரியர் :-

வித்துவான்
**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
**சி அருணைவடிவேல் முதலியார்**

உ
குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

**தருமையாதீனத் திங்கள் இதழ்**

**மலர் 40 || 10–5–81 || இதழ் 6**

## உட்பொருள்





ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 10
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 12
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரூ. 18
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 100
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ, 125



உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

**ஸ்ரீ ஞானம்பிகை உடனுறை ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயில்**

# பெருவிழா அழைப்பிதழ்

பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள்மீது வைத்த எல்லையிலாப் பெருங்கருணையினாலே, காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நிகழ் குறியாம் சிவலிங்கமாதி திருவுருக்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தலங்கள் பலவற்றுள் இந்திரன், அகத்தியர், தருமன் ஆகியோர்களால் பூசிக்கப்பெற்றதும், காவிரி முதலிய தீர்த்தங்களரல் சிறப்புற்றதும், வில்வாரண்யம் என்னும் திருநாமம் உற்றதும் ஆகிய சிறப்புக்களை உடையது தருமபுரம். இத்தலத்தில் ஸ்ரீ ஆலவாய்ச் சொக்கநாதப்பெருமான் திருவருளையும், கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசதேசிகர் அருளையும் நிரம்பப்பெற்றுத் திகழ்ந்த ஸ்ரீ குருஞானசம்பந்ததேசிக பரமாசாரிய சுவாமிகள், தம் குருமூர்த்திகளது அருளாணையின்படி சைவ பரிபாலனம் என்றும் நிகழ்ந்துவருவதற்குரிய ஞானபீடத்தை இங்கு நிறுவி வீற்றிருந்து, ஜீவசமாதி கூடிய கோயிலே ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில். இதன்கண்எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஞானம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமிக்கு, துன்மதி ஆண்டு வைகாசித்திங்கள் 2 ஆம் நாள் (15—5—1981) வெள்ளிக்கிழமை தொடங்கிப் பெருவிழா நடைபெறும்.

இந்நாட்களில் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும், சமயப் பயிற்சி வகுப்பும் நடைபெறும். சிவநேசச் செல்வர்கள் யாவரும் வந்திருந்து திருவிழாக்காட்சியைத் தினமும் தரிசித்தும் சொற்பொழிவுகளைக் கேட்டும் நலம் பெறுவார்களாக.

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்

தருமையாதீனம் மடாலயம்,
துன்மதி – சித்திரை.

**கார்பார் சொக்கநாதத் தம்பிரான்.**

உ
சிவமயம்

தருமையாதீனத்தை நிறுவியருளிய

# ஸ்ரீ ஆதிபரமாசாரியமூர்த்திகள் சரிதம்



பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் சைவ வேளாள மரபில் ஸ்ரீ சுப்பிரமணியப் பிள்ளை மீனாட்சியம்மை என்னும் பெற்றோர்களுக்கு அரும்பெறற் புதல்வர் ஒருவர் சோமவார சுபதினத்தில் தோன்றினர். பிள்ளைத்திருநாமம் ஞானசம்பந்தர் என்பது. இளமையிலேயே கல்வியில்குறைவிலாது நிரம்பினர். பெற்றோர் தம் ஆன்மார்த்த மூர்த்தியாம் ஸ்ரீ சொக்கலிங்கத்தை வழிபட மதுரை சென்றபொழுது உடன் சென்ற ஞானசம்பந்தர் "உண்மை அம்மை அப்பர் அங்கயற்கண்ணியும் ஆலவாய் அரனுமே" என்று சொல்லிப் பெற்றோருடன் ஊர்திரும்ப மறுத்து மதுரையிலேயே இருந்தார்.

நாள்தோறும் பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கிக் காலந் தோறும் ஸ்ரீ சொக்கநாதரை வழிபட்டுவந்தார். பொற்றாமரைத் தீர்த்தக் கரையில் சிவனடியார் பலர் நீராண்ட புரோதாயம் ஆடி, தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ் வடமும் உடையவர்களாய் நாயகன் சேவடி தைவரும் சிந்தை யுடன் அமர்ந்து நைந்துருகும் அன்போடு சிவபூஜை செய்தனர். அவ்வடியார்களது செயலில் ஒருநாள் ஞானசம்பந்தரதுஉள்ளம் ஈடுபட, முற்பிறப்பின் பூஜை உணர்வு அவருக்கு முகிழ்த் தெழுந்தது. ஆலவாய் அப்பனை, ஆன்மார்த்த மூர்த்தியாகப் பூஜிக்க அளவிலா ஆர்வங்கொண்டு அப்பெருமானைவேண்டி னர். அப்பெருமான் அவரது கனவில் தோன்றி, "முற்பிறப்பில் உன்னால் பூஜிக்கப் பெற்றுவந்த நாம் பூஜைப்பெட்டகத்துடன் பொற்றாமரைத் தீர்த்தத்துள் ஈசானத்திசையில் இருக்கிறோம்; மூழ்கிப் பெறுக" என்று அருளிச்செய்தார். ஞானசம்பந்தர் அங்ஙனமே மறுநாள் பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கி, ஆன்மார்த்த மூர்த்தியைப் பெற்று ஆனந்தபரவசம் உற்றார். பின்னர், ஸ்ரீ சொக்கநாதர் சந்நிதியில் சென்று "பெருமானே! பூசிக்கும் நெறியை அருள்புரியவேண்டும்" என்று வேண்டினர். அன்று இரவு பெருமான் கனவில்தோன்றி. "திருவாரூர் ஞானப் பிரகாசரிடம் ஞானோபதேசமும் சிவபூஜையும் பெறுக" என்று

பணித்தருளி ஞானப்பிரகாசரது கனவிலும்சென்று, "உன்னிடம் வருகின்ற நம் ஞானசம்பந்தனுக்கு விதிப்படி சிவஞானேப தேசம்செய்து சிவபூஜையும்எழுந்தருளப்பண்ணிவைப்பாயாக" என்று சொல்லி மறைந்தருளினர்.

திருவாரூரில் சித்தீச்சரத்தில் தென்முகக்கடவுளின் திருமுன்பு சீடரின் வருகையை ஞானப்பிரகாசர் எதிர்நோக்கியிருந்தார். அருளாணையின்படி ஞானசம்பந்தர், கமலையை அடைந்து குருமூர்த்தியைக் கண்டதும், காந்தம் கண்ட இரும்புபோல் அவர்வசமாகி, சிவதீக்ஷையும், சிவபூஜையும் பெற்ருர். பின்பு அவர் நாள்தோறும் ஸ்ரீ சொக்கலிங்கத்தைப் பூஜித்துப் பாடியதே சொக்கநாத வெண்பா. அவர் செய்த குருதோத்திரமே ஞானப்பிரகாசமாலை. ஒருநாள், ஞானப் பிரகாசர் பூங்கோயில் வழிபாட்டினை முடித்து மீள்கையில், கைவிளக்கு எடுப்போன், அங்கு இல்லாமைகண்டு, ஞான சம்பந்தர் தாமே அப்பணியினை மேற்கொண்டு செல்ல, சிவத்தியான உள்ளத்துடன் இல்லம் செல்லும் குருமூர்த்திகள் இல்லத்தை அணுகியபொழுது "நிற்க" என்று சொல்லி உள்ளே சென்ருர். குருவாணை கடவாத ஞானசம்பந்தர் கைவிளக்கோடு வெளியிலே நின்றிருந்தார். மழை வந்தது. ஓர் அடியும் அப்புறம் பெயர்ந்திலர். மழை அவருக்கு மூன்றடி அப்பாற் சூழ்ந்தே பெய்தது. மறுநாட்காலையில் குருபத்தினியார் கண்டார். குருமூர்த்திகள் கேட்டு வந்து, 'நீர் குவலயத்திற்கு உண்மை விளக்கும் குருவாயினீர்; தனியிடத்தில் இருந்து உம்மைநாடி ஓடிவரும் காரணர்க்கு உண்மை வைத்துச் சமய பரிபாலனம் புரிக' என்றருளினர். சீடர்,

"கனக்கும் பொதிக்கும்எருதுக்கும்தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சையோ? இணங்கார்புரத்தைச்
சினக்கும் கமலையுள் ஞானப்பிர காச சிதம்பர இன்று
உனக்கிச்சை எப்படி? அப்படியாக உரைத்தருளே.

என்று வேண்டினர். அதுகேட்டுக் குருமூர்த்திகள் 'தருமபுரம் செல்க' எனப் பணித்தருளினர்.

ஞானசம்பந்தர் அன்றுமுதல் குருஞானசம்பந்தராகித் தருமபுரத்தை அடைந்து சமய பரிபாலனம் புரிந்தார்; ஞான நூல்கள் பல அருளினர்; ஆனந்தபரவசர் முதலிய பலர்வழி ஞான பரம்பரையை உலகில் நிலவச் செய்தருளினர். அவரே தருமபுர ஆதீன ஞானபீடத்தின் ஆதிபரமாசாரிய மூர்த்திகள்.

---

உ

சிவமயம்

# திருநாள் விபரம்

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி | கிழமை | திரு நாள் | விபரம் |
|---|---|---|---|---|
| வைகாசித் திங்கள் 1 | 14—5—81 | வியாழன் | | காலை கணபதி ஹோமம். இரவு ஹஸ்த நக்ஷத்திரம் கூடியசுபதினத்தில் மணி 8-30 க்குமேல் 9-30 க்குள் தனுர் லக்னத்தில் அனுக்ஞை, விக்னேசுவர பூஜை, வாஸ்துசாந்தி, மிருத்ஸங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம். |
| 2 | 15—5—81 | வெள்ளி | 1 | ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் காலை மணி 8 க்குமேல் 9 க்குள் மிதுன லக்னத்தில் ஸ்ரீ ஞானாம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிக்குமஹாத் துவஜாரோகணம். |
| 3 | 16—5—81 | சனி | 2 | கற்பகவிருக்ஷக் காட்சி. |
| 4 | 17—5—81 | ஞாயிறு | 3 | பூதம், பூதகி, இடும்பவாகனக் காட்சி. |
| 5 | 18—5—81 | திங்கள் | 4 | நந்தி, காமதேனு, குதிரைவாகனக் காட்சி. |
| 6 | 19—5—81 | செவ்வாய் | 5 | சகோபுர ரிஷபவாகனக் காட்சி. |

துன்மதி ஆண்டு

| | | | | |
|---|---|---|---|---|
| 7 | 20—5-81 | புதன் | 6 | யானை, அன்னம், ஆட்டுக்கிடாவாகனக் காட்சி. |
| 8 | 21—5—81 | வியாழன் | 7 | இரவு மணி 8 க்குமேல் 9 க்குள் தனுர் லக்னத்தில் ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமிக்குத் திருக்கல்யாண வைபவம்; வெள்ளி ரதம், புஷ்ப விமானக் காட்சி. |
| 9 | 22-5—81 | வெள்ளி | 8 | குதிரை, கிளி, யானைவாகனக் காட்சி. |
| 10 | 23—5—81 | சனி | 9 | அதிகாலை மணி 4-30 க்குமேல் 5-30 க்குள் மேஷ லக்னத்தில் மஹாரதாரோகணம்; காலை மணி 8-க்கு திருத்தேர் வடம் பிடித்தல். |
| 11 | 24—5—81 | ஞாயிறு | 10 | காலை ஸ்ரீ சபாநாயகர் தீர்த்தம்கொடுத்தருளல்; பிறகு பஞ்சமூர்த்திகளும் ரிஷபாருடராய் எழுந்தருளிக் காவிரியில் தீர்த்தம் கொடுத்தருளல். இரவு துவஜாவரோகணம். |
| 12 | 25—5—81 | திங்கள் | | மௌன உற்சவம். |
| 13 | 26—5—81 | செவ்வாய் | | ஸ்ரீ சண்டேசுவரர் உற்சவம். |
| 14 | 27—5—81 | புதன் | | காலை உற்சவப் பிராயச்சித்தாபிஷேகம். இரவு மணி 8 க்குமேல் 9 க்குள் தனுர் லக்னத்தில் பஞ்சமூர்த்திகள் யதாஸ்தானம். |

# தருமையாதீனம் குருபூஜை விழா, சமயப் பயிற்சி வகுப்பு

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆசியுரை

தொடக்க உரை: செல்வி M. P. நிர்மலா எம். ஏ. கோட்டாட்சியர், மாயூரம்.

| காலம் கிழமை | காலை 10-30 to 11-30 | 11-30 to 12-30 | 2-30 to 3-30 | 3-30 to 4-30 |
|---|---|---|---|---|
| 10-5-81 ஞாயிறு | 'பதிஇயல்பு' மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் | 'சிவப்பிரகாசம்' மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் | 'வேதம்' திரு. பி. இராமதாஸ் ஐயர் | 'உபநிடதங்கள்' திரு. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் |
| 11-5-81 திங்கள் | 'பசுஇயல்பு' ,, | ,, | ,, | 'திருமுறைகள்' திரு. வி. சா. குருசாமி தேசிகர் |
| 12-5-81 செவ்வாய் | 'பாசஇயல்பு' ,, | ,, | 'ஆகமங்கள்' திரு. எஸ். சுவாமிநாத சிவாசாரியார் | 'திருக்கோயில்கள்' திரு. ந. காளிங்கராஜ் |
| 13-5-81 புதன் | 'திருவுந்தியார்' திரு. கு. சுந்தரமூர்த்தி | ,, | ,, | 'திருமூர்த்தங்கள்' ,, |
| 14-5-81 வியாழன் | ,, | ,, | 'புராணங்கள்' டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன் | 'கல்வெட்டுக்கள்' ,, |
| 15-5-81 வெள்ளி | ,, | ,, | 'சங்க காலச் சைவம்' திரு. வை. ஆறுமுகம், பிள்ளை | 'பஞ்சபூத மருத்துவம்' திரு.சந்திரசேகரானந்த் |

ஸ்ரீ

| | | | | |
|---|---|---|---|---|
| 16-5-81 சனி | ,, | ,, | 'இதிகாசங்கள்' திரு ஆ. இராமபத்திரன் | 'முருக வழிபாடு' திரு. சுகி. சிவம் |
| 17-5-81 ஞாயிறு | ,, | ,, | 'நீதி நூல்கள்' திரு.வே.கண்ணப்பன் | 'சித்தமருத்துவம்' திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் |
| 18-5-81 திங்கள் | 'சிவஞானபோதம்' புலவரேறு திரு. ந. ரா. முருகவேள் | ,, | சொக்கநாத வெண்பா திரு. மு. சிவச்சந்திரன் | 'கிராமதேவதைகள்' திரு.த.அகரமுதல்வன் |
| 19-5-81 செவ்வாய் | ,, | 'திருவருட்பயன்' நாவலர் திரு. க. வச்சிரவேல் முதலியார் | 'சிவபோகசாரம்' திரு. இரா. செல்வக் கணபதி | 'திருக்குறள்' திரு. வீ. முனிசாமி |
| 20-5-81 புதன் | ,, | ,, | 'திருவிளையாடற் புராணம்' திரு. சொ. முத்தையன் | 'கந்தர்கலிவெண்பா' திரு. சி. சு. மணி |
| 21-5-81 வியாழன் | ,, | ,, | 'சைவ இலக்கியங்கள்' திரு. இரா. செல்வக் கணபதி | 'உண்மைவிளக்கம்' ,, |
| 22-5-81 வெள்ளி | ,, | ,, | 'பக்தி இலக்கியங்கள்' டாக்டர் திரு. ப. அருணாசலம் | 'சிற்றிலக்கியங்கள்' திரு. மு. ஆறுமுக தேசிகர் |
| 23-5-81 சனி | ,, | ,, | 'வைணவ இலக்கியங்கள்' திரு.தெ.ஞானசுந்தரம் | நம்நாட்டு வைத்தியம் திரு. தனுக்கோடி |

குறிப்பு :- நாள்தோறும் காலை மணி 6-30 முதல் 7-30 வரை யோகாசனப்பயிற்சி.

,, ,, ,, 8-30 ,, 9-30 ,, ஆலயவழிபாடு.

உ
குருபாதம்

# திருநெறிய தெய்வத் தமிழ்மாநாடு

## முதல்திருநாள்

15—5—81 வெள்ளிக்கிழமை] [மாலை 6-30 மணி

**ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருநாள் — கவிதாஞ்சலி**

வரவேற்புரை :

**வித்துவான் ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**
கட்டளைவிசாரணை, வேளூர் தேவஸ்தானம்.

வாழ்த்துரை :

மதுரை ஸ்ரீ திருஞானசம்பந்தர் ஆதீனம்
292 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

தலைமைக்கவிதை :

டாக்டர் திரு. **செ. சிங்காரவேலன்** எம். ஏ., பிஎச். டி.
மாயூரம்

பொருள் :

**'ஸ்ரீ குருஞானசம்பந்தர் வாழ்வியல் அற்புதங்கள்'**

பங்கேற்போர் :

கவிஞர். திரு. **மா. வே. பசுபதி** திருப்பனந்தாள்
— **திருஅவதாரம்**

கவிஞர். திரு. **ஞானச்செல்வன்** எம். ஏ., திருவாரூர்
— **மதுரையில் உள்ளொளி**

கவிஞர். திரு. **த. தியாகராஜன்** எம். ஏ. பூம்புகார்
— **ஞானகுரு தரிசனம்**

கவிஞர். திரு. **பெ. வேலு** எம். ஏ. தாரமங்கலம்
— **அன்னை அருள்பெறல்**

கவிஞர். திரு. அ. பாலருவாயன் எம். ஏ. சென்னை
— தருமையில் குருமுதல்வர்

இரவு 8–30 மணி

இன்னிசை விரிவுரை

தஞ்சை. திருமதி. டி. ஆர். கமலாமூர்த்தி
— சுந்தரமூர்த்தி சுவாமிகள்

★

## இரண்டாந்திருநாள்

16—5—81 சனிக்கிழமை] [மாலை 6-30 மணி

திருத்தொண்டர் திருநாள் — சிந்தனைமேடை

வரவேற்புரை :

வித்துவான். ஸ்ரீமத். சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள்
தருமையாதீன சமயப் பிரசாரநிலையம், சென்னை

சிறப்புரை :

சொல்லின் செல்வர்
திரு. சுகி. சிவம் பி. ஏ., பி. எல்.,
சென்னை

சிந்தனையாளர் :

தருமையாதீனப் புலவர்
மகாவித்துவான். திரு. ச. தண்டபாணி தேசிகர்
மதுரை

பங்கேற்போர் :

பண்டித-வித்துவான். திரு. ஞ. சுந்தரமூர்த்தி எம். ஏ.,
திருப்பனந்தாள்

வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.,
தருமபுரம்

திரு. வீ. ஆறுமுகம் பிள்ளை I, A. S. (ஓய்வு)
மாயூரம்

**திரு. இரா. இராஜசேகரன் பி. எஸ்ஸி., பி எல்.,**
பூம்புகார்

**திருமதி. ப. நீலா எம். ஏ.,**
தருமபுரம்

இரவு 8-30 மணி

## இன்னிசை

இசைஞானச் செல்வமணி,

**காட்டூர். திரு. இராஜசேகரன்** எம். ஏ., பி. எட்.

★

## மூன்றாந்திருநாள்

17—5—81 ஞாயிற்றுக்கிழமை] [மாலை 6-30 மணி

**சங்க இலக்கியத் திருநாள் — இலக்கியப்பேருரை**

வரவேற்புரை :

**வித்துவான் ஸ்ரீமத் மௌன. மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள்**
கட்டளைவிசாரணை. ஸ்ரீ மௌனமடம், திருச்சிராப்பள்ளி.

சிறப்புரை :

'செந்தமிழ்க் காவலர்'
**திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்**
திருச்சிராப்பள்ளி

பேருரை :

**டாக்டர். திரு. ஔவை. து நடராசன்** எம். ஏ., பிஎச். டி.,
சென்னை

**— சங்க இலக்கியம்**

இரவு 8-30 மணி

## இன்னிசை

'தமிழ் இசைச்செல்வர்'
**கமுகுமலை திரு. ஏ. கந்தசாமி**

## நான்காந்திருநாள்

18—5—81 *திங்கட்கிழமை]* *[மாலை* 6-30 *மணி*

### சமய வளர்ச்சித் திருநாள் — கருத்தரங்கம்

வரவேற்புரை :

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர்** எம். ஏ.
முதல்வர், ஆதீனப்பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

சிறப்புரை :

பேராசிரியர் **திரு. தா. கு. சுப்பிரமணியம்** எம். ஏ.
மதுரை

அரங்கத்தலைமை :

டாக்டர் **திரு. சி. பாலசுப்பிரமணியம்** எம். ஏ., எம்.லிட்., பிஎச். டி
சென்னை

பொருள் :

**" சமய வளர்ச்சியில் எங்கள் பங்கு "**

பங்குபெறுவோர் :

**திரு. வை. ஆறுமுகம் பிள்ளை**
தருமபுரம்
**— மன்றங்கள் சார்பில்**

டாக்டர் **திரு. மு. சுவாமிநாதன்** எம் பி., பி எஸ்.
மாயூரம்
**— மருத்துவர்கள் சார்பில்**

வழக்குரைஞர் **திரு ஆர். சிவபுண்ணியம்** பி ஏ., பி. எல்.
மாயூரம்
**— வழக்கறிஞர்கள் சார்பில்**

செல்வி **M P. நிர்மலா** எம். ஏ.
கோட்டாட்சியர், மாயூரம்.
**— அரசு சார்பில்**

**திரு. இரத்தின. பாலசுப்பிரமணியம்** எம். ஏ.
மாயூரம்
**— கல்லூரி முதல்வர்கள் சார்பில்**

**திரு. ச. பன்னீர்செல்வம்**
ஆடுதுறை
**— மாணவர்கள் சார்பில்**

இரவு 8-30 மணி

**பல்சுவை நிகழ்ச்சி**

தருமபுரம் ஸ்ரீ குஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி
மாணவ - மாணவியர்

★

## ஐந்தாந்திருநாள்

19—5—81 செவ்வாய்க்கிழமை] [மாலை 6-30 மணி

**திருவள்ளுவர் திருநாள் — வழக்காடு மன்றம்**

வரவேற்புரை :

**திரு. வி ஆறுமுகம் பிள்ளை ஐ. ஏ. எஸ். (ஓய்வு)**
தலைவர், ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றம், மாயூரம்(கிளை).

நடுவர் :

**திருக்குறளார் திரு. வீ. முனுசாமி பி. ஏ., பி. எல்.**
விழுப்புரம்

பொருள் :

**'திருக்குறள்நெறியைப் பின்பற்றத் தவறிய மக்கட்சமுதாயம் குற்றமுடையதே'**

| வழக்குத் தொடுப்பவர் | வழக்கு மறுப்பவர் |
|---|---|
| பேராசிரியர், | பேராசிரியர், |
| **திரு. மனம். சேர. சந்திரகாசன்** | **திரு. அ. கலியபெருமாள்** |
| சேலம் [எம். ஏ. | மாயூரம் [எம். ஏ. |

இரவு 8-30 மணி

**கலை நிகழ்ச்சி**

தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி
மாணவ - மாணவியர்

## ஆறுந்திருநாள்

20—5—81 புதன்கிழமை] [மாலை 6-30 மணி

### திருமுறைத் திருநாள் — வினு-விடை அரங்கம்

வரவேற்புரை :

**செந்தமிழ்க்காவலர் திரு. இரா. இராஜசேகரன் பி. எஸ்சி., பி. எல்**
தலைவர், ஸ்ரீ குருஞானசம்பந்தர்பணிமன்றம்,
மேலையூர் (கிளை), பூம்புகார்.

அரங்கநாயகர் :
'செந்தமிழ்ச் செல்வர்'
**திரு. கி. வா. ஜகந்நாதன் எம். ஏ.**
சென்னை

பங்கேற்போர் :

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.**
தருமபுரம்

**பேராசிரியர் திரு தி. வ. காந்திமதிநாதன் பி. ஏ., ஆனர்சு**
மாயூரம்

**புலவர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ.**
தருமபுரம்

**புலவர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.**
தருமபுரம்

**வித்துவான் திரு. சோ. முத்தையன் எம். ஏ.**
தருமபுரம்

**புலவர் திருமதி. துரை. வள்ளி எம். ஏ.**
மாயூரம்

இரவு 8–30 மணி

### இன்னிசை

'இசைஞானப்பேரரசி'

**குடந்தை திருமதி. வி. பி. இராஜேஸ்வரி**

## ஏழாந்திருநாள்

21—5—81 *வியாழக்கிழமை]* *[மாலை* 6-30 *மணி*

**ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி**

## திருக்கல்யாணத் திருநாள்

**காப்பியத் திருநாள் — இலக்கியப்பேருரை**

வரவேற்புரை :

**டாக்டர் திரு. மு. சுவாமிநாதன்** எம். பி. பி. எஸ்.,
மாயூரம்

சிறப்புரை :

**டாக்டர் திரு. ப. அருணசலம்** எம். ஏ., பி எச் .டி.,
நாகர்கோயில்

பேருரை :

**பேராசிரியர் திரு. அ. சங்கரவள்ளிநாயகம்** எம். ஏ., பி. டி.
கோயிற்பட்டி

**— சிலப்பதிகாரம்**

இரவு *8–30* மணி

*ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் :*

மகாவித்துவான். திரு. ச. தண்டபாணி தேசிகர்
மதுரை

**— திருக்கல்யாண தத்துவம்**

இரவு *9–30* மணி

## பொம்மலாட்டம்

## மாயூரம் ஸ்ரீ கணநாதர் பொம்மை நாடகசபை

**— வள்ளியம்மை திருமணம்**

## எட்டாந்திருநாள்

22—5—81 வெள்ளிக்கிழமை] [மாலை 6-30 மணி

### சேக்கிழார் திருநாள் — பட்டிமண்டபம்

வரவேற்புரை :

செந்தமிழ் சிவநெறிச் செல்வர்,
**திரு. வை. ஆறுமுகம் பிள்ளை**
கௌரவ பொதுச் செயலாளர்,
ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணி மன்றம், தருமபுரம்.

தொடக்கவுரை :

**நெல்லை திரு. ஆ. ஜெபமணி**
சென்னை

நடுவர் :

திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி மகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
(தவத்திரு. குன்றக்குடி அடிகளார்)

பொருள் :

**சேக்கிழார், பெரியபுராணத்துள் பெரிதும் வற்புறுத்துவது சமயச்சீர்திருத்தமா? சமுதாயச்சீர்திருத்தமா?**

| சமயச்சீர்திருத்தமே: | சமுதாயச்சீர்திருத்தமே: |
|---|---|
| **திரு. கோ. சாரங்கபாணி பி லிட்.,**<br>காரைக்கால் | **திரு ஆ. செகந்நாதன் எம்.ஏ.**<br>பூம்புகார் |
| **திரு. த. அகரமுதல்வன் எம். ஏ.**<br>பூம்புகார் | **திரு பழநி. கிருஷ்ணன் எம்.ஏ.**<br>தூத்துக்குடி |
| **திரு. சி. சு. மணி பி ஏ.**<br>பாளையங்கோட்டை | **திரு. சீனி. சண்முகம் எம். ஏ.**<br>நாகூர் |

## ஒன்பதாந்திருநாள்

23—5—81 *சனிக்கிழமை]* *[மாலை* 6-30 *மணி*

### ஆழ்வார் திருநாள் — இலக்கியப்பேருரை

வரவேற்புரை :

**வித்துவான். திருமதி. ப. நீலா எம். ஏ.,**
பேராசிரியை. ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

வாழ்த்துரை :

காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

*சிறப்புரை :*

**திரு. க. வச்சிரவேல் முதலியார்** பி. ஏ., எல். டி.
மதுரை

பேருரை :

**திரு. தெ. ஞானசுந்தரம்.** எம். ஏ., டிப். ( வடமொழி )
சென்னை.

**— திவ்வியப்பிரபந்தம்.**

*இரவு 8–30 மணி*

### திருமுறை இசையரங்கு

**திரு. எஸ். திருஞானசம்பந்தன், சீகாழி**
**திரு. எஸ். முத்துக்கந்தசாமி, திருச்சிராப்பள்ளி**

★

## பத்தாந்திருநாள்

24—5—81 ஞாயிற்றுக்கிழமை] [காலை 8-00 மணி

## குருபூஜைவிழா

### பண்டாரசாத்திரத் திருநாள்

வரவேற்புரை :

புலவர் திரு. இரா. செவ்வக்கணபதி எம். ஏ
பேராசிரியர், ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்

வாழ்த்துரை :

திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடம்
**ஸ்ரீமத் காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**

விரிவுரைகள் :

மகாவித்துவான் திரு சி. அருணைவடிவேல் முதலியார்
அண்ணாமலைநகர்
— **சொக்கநாதக்கலித்துறை**

வித்துவான் திரு. மு. **வைத்தியநாதன்**
திருச்சிராப்பள்ளி
— **ஞானப்பிரகாசமாலை**

வித்துவான் திரு. மு. சுந்தரராஜன் எம். ஏ.
திருவாரூர்
— **சொக்கநாதவெண்பா**

வித்துவான் திரு. ந. இராமலிங்கம்
சென்னை
— **சிவபோகசாரம்**

காலை 9-30 மணி

## ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் வழிபாடு

குருபூஜை விழா மலர் :- **"ஸ்ரீ குருஞானசம்பந்தர் அட்டகம்"**

காலை 11-00 மணி

ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் வழிபாடு
( ஆதீனஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருக்கோயில் )

## குருபூஜைத்திருநாள்

24—5—81 ஞாயிற்றுக்கிழமை] [பிற்பகல் 4-00 மணி

வரவேற்புரை :

**புலவர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.**
பேராசிரியர், ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

சிறப்புரை :

**திரு. P. T. R. K. தியாகராஜன் B. E.,**
மதுரை

விரிவுரைகள் :

**திரு. ந. ரா. முருகவேள் எம். ஏ., எம். ஓ. எல்.**
சென்னை

**— திரிபதார்த்தருபாதிதசகாரியஅகவல்**

**வித்துவான் திரு. தா. குருசாமி தேசிகர்**
மதுரை.

**— முத்திநிச்சயம்**

**வித்துவான் திரு. கே. எம். வேங்கடராமையா எம். ஏ., பி. ஓ. எல்.**
அண்ணாமலைநகர்.

**— சோடசகலாப்பிராசாதசட்கம்**

மாலை 6-30 மணி அளவில்

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**
குருமூர்த்த வழிபாட்டிற்கு எழுந்தருளல்

இரவு 8-30 மணி

**வில்லிசை**

**கோவை திரு. கா. தி. அரங்கநாதன்**

**— ஸ்ரீ குருஞானசம்பந்தர்**

## பதினொராம்திருநாள்

25—5—81 திங்கட்கிழமை] [காலை 9-00 மணி

## சைவ – மரபுத் திருநாள்

## பட்டணப்பிரவேசம்

வரவேற்புரை :

வித்துவான் திரு கா. ம. கண்ணப்பன்
தமிழாசிரியர், ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்பள்ளி, தருமபுரம்

சிறப்புரை :

'திருமுறைப்புரவலர்'
திரு. இராம. முத்துப்பழனியப்பச் செட்டியார்
மதுரை

விரிவுரைகள் :

பண்டித-வித்துவான் திரு சு. சுந்தரமூர்த்தி எம். ஏ.
திருப்பனந்தாள்
— திருநீறு

வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.
தருமபுரம்
— ஐந்தெழுத்து

வித்துவான் திரு. மு. இரத்தின தேசிகர்
திருவாரூர்
— உருத்திராக்கம்

வித்துவான் திரு. மு. ஆறுமுக தேசிகர்
தருமபுரம்
— சிவவேடம்

காலை 11-00 மணி அளவில்

## ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் வழிபாடு

நண்பகல் 1-00 மணி

## மாகேசுவரபூஜை

25—5—81 திங்கட்கிழமை] [மாலை 6-00 மணி

## சமயப் பயிற்சி வகுப்பு நிறைவுவிழா

## பயிற்சியாளர்களுக்குச் சான்றிதழ் வழங்குதல்

வரவேற்புரை :

'அறப்பணிச்செல்வர்'
டாக்டர் திரு. கே. அரங்கசாமிப் பிள்ளை எம். பி. பி. எஸ்.
சிதம்பரம்

சிறப்புரை :

திரு. ப. நெடுமாறன் எம். ஏ., எம். எல். ஏ.
மதுரை

இரவு 7-00 மணி

## இன்னிசை

இசைமணி, தருமையாதீன இசைப்புலவர்.

**சீகாழி திரு. எஸ். கோவிந்தராஜன் - குழுவினர்**

இரவு 10-00 மணி

தருமையாதீனம் 26 – ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

## பட்டணப்பிரவேசம்



உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 40 | துன்மதி - சித்திரை - 10—5—81 | இதழ் 6

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## கண்களைப் போற்றுவோம்! கடமையை ஆற்றுவோம்!

### உலகஇயக்கத்தின் உண்மை :

உலக இயக்கம் மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு ஆற்றலாலேயே தடையின்றி நிகழ்ந்துவருகிறது என்பதை அனைவரும் அறிவர். இரவு பகலும், பருவ காலங்களின் வருகையும், உயிரினங்களின் வருகையும், தாவரம், மற்றும் உயிரினங்களின் முறையான வாழ்வும் இவ்வாற்றலாலேயே நடைபெறுகின்றன. இப்பேராற்றலை நமது முன்னோர் இறைவனின் கருணையால் நிகழ்வதாகவே நன்கு அறிந்து போற்றினர். ‘அவனன்றி ஓரணுவும் அசையாது’ என்றும், ‘காண்பார் யார் கண்ணுதலாய் காட்டாக்காலே’ என்றும் வழங்கும் சான்றோர் மொழிகள் இவற்றை மெய்ப்பிக்கின்றன. மனித முயற்சிகளுக்கு

மேம்பட்ட ஒரு பேராற்றலால்தான் உலகியல் முறைமாருது நிகழ்கிறது என்பதனை உணர்வதே கல்வியின்பயன். இதுவே உண்மையான பகுத்தறிவு. திருவள்ளுவரும்,

'கற்றதனல் ஆயபயன் என்கொல்? வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்'.

என இக்கருத்தை வலியுறுத்தினர்.

## பண்புடையார் என்பார் யார்?

இறைவனின் ஆற்றல் தகுதிவாய்ந்த சான்ருேர்கள் வாயிலாகவே உலகில் விளங்கித்தோன்றும். மானுடச் சட்டைதாங்கி மனிதர்கள்போல் இவர்கள் காணப்படினும், இறைவனுகவே எண்ணத்தக்க பெருமையும் சிறப்பும் இவர்களுக்கு உண்டு. இத்தகு அருளாளர்களையே 'குருநாதர்' என்றும் 'ஆசிரியர்' என்றும், 'நடமாடும் கோயில் நம்பர்' என்றும், நம் முன்ஞேர் குறித்தனர். திருவள்ளுவரும் இத்தகைய அருளாளர்களையே 'நீத்தார்' என்ற சொல்லால் குறித்தருளுகிருர். சங்கப்புலவர்களும், பிறரும் உலகத்தின் நிலைபேற்றுக்குக் காரணமாகக் குறித்தருளும் சான்ருேர்கள் இத்தகு அருளாளர்களையே யன்றி, வெறும் கல்வி கேள்விகளில் மேம்பட்ட உலகியல் அறிவுடையாரைக் குறிப்பனவாகமாட்டா. 'உண்டால் அம்ம இவ்வுலகம்' என்ற புறப்பாட்டில் குறிக்கப்படும் 'தமக்கென முயலா நோன்ருள் – பிறர்க்கென முயலுநர்' என்பாரும், வள்ளுவர் குறித்தருளும் 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்ற வரியில் வரும் பண்புடையாரும் இத்தகு அருளாளர்களே யாதல் உற்று உணர்வார்க்கு நன்கு புலனுகும்.

## வாழையடிவாழையென வந்தோர்:

உலக நிலைபேற்றுக்குக் காரணர்களாகத் திகழும் இவ்வருளாளர்கள் 'உற்றநோய் நோன்று உயிர்க்கு உறுகண் செய்யாத' தவம் உடையவர்கள்; கண்ணுதலும் கண்டக் கறையும் மறைத்து மண்ணுலகில் வாழும் தெய்விகப் பெரியோர்கள். ஒன்னுரைத் தெறுதலும், உவந்தாரை ஆக்கவும் வல்ல தவமுடையவர்கள்; குணம் என்னும் குன்றேறி நிற்கும் ஞானிகள்; ஏதுக்களாலும், எடுத்த மொழியாலும் சோதிக்க முடியாத சுடர் ஒளியாகத் திகழ்பவர்கள்; எக்காலத்திலும் நம்மோடு வாழ்ந்தும் நம் இயல்பைக் கடந்த அருளாளர்கள்; பிறர்க்கு வரும் துயரங்களைத் தாம் ஏற்றுக்கொண்டு, உயிர்களுக்கு நலமே விளைய வாழ்ந்திருக்கும் கைமாறு கருத.த

மாரிபோன்றவர்கள்; நமது சைவமரபில் வாழையடிவாழையென வரும் திருமூலரும், திருநாவுக்கரசரும், மெய்கண்டாரும், தாயுமானுரும், குருஞானசம்பந்தரும் போன்ற பல பேரருளாளர்களாலேயே இவ்வுலகம் இன்றும் நிலைபேறுடையதாக வாழ்ந்திருக்கிறதேயன்றிப் பிறிதில்லை.

## ஜீவநதி வற்றுவதில்லை :

இத்தகு அருள்ஞானச் சான்ருேர் வரிசையில் நமது திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தைத் தோற்றுவித்தருளிய ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குறிக்கத் தக்க பீடுடையவர்கள். ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்து மதுரைப் பொற்ருமரையில் ஸ்ரீ சொக்கநாதப் பெருமானைப் பூஜா மூர்த்தியாகப்பெற்று, அவனருளால் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசதேசிகரை அருளாசிரியராக அடைந்து, தருமையில் திருமடங்கண்டு, உலகினை உய்விக்க எட்டு அருள்ஞானப் பனுவல்களைப் படைத்து, நம்மையெல்லாம் வாழ்விக்கவேண்டி என்றும் வாழ்பவராகத் தருமையிலே ஜீவசமாதி கூடியிருக்கும் இவர்கள் பெருமைகளை விரிப்பின் பெருகும்; தொகுப்பின் எஞ்சும், காவிரியில் நம் கண்ணுக்குப் புலப்பட நீர் ஓடவில்லை என்ருலும், அது காவிரி என்கின்ற பெயரை இழந்துவிடுவதில்லை. மண்ணின் கீழ் மறைவாகக் காவிரியின் ஓட்டம் இருத்தல்போல் தருமையாதீன ஜீவநதியின் உள்ளோட்டமாக நின்று வாழ்வித்துவரும் கருணையாளர் ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

## அருளாளர்கள் பெருமை :

உலகினை வாழ்விக்க வந்த உத்தம ஞானிகளையும், அவர்களின்தூயதொண்டுகளையும் இனங்கண்டு போற்ற வேண்டும். இவர்களை மற்றையவர்களிடமிருந்து பிரித்து அறிந்து போற்றிட நிறைந்த ஞானமும் – பண்பும் வேண்டும். மலை என ஓர் பொருளைக் கண்ணுல் கண்டு ‘உண்டு’ என்று தெளியும் காட்சியறிவைவிட, ‘காற்று’ என்ற ஒன்று உண்டு என அனுமானித்து அறிதலே சிறப்பு. உலகியல் அறிவு உடையவர்களின் அறிவுக்கும் உணர்வுக்கும் அப்பாற்பட்ட இத்தகு ஞானிகளை இனங்கண்டு போற்றும் உணர்வு நமது மக்களுக்கு காலங்காலமாக இருந்துவருகிறது.

இத்தகு ஞானிகளின் பெருமைகளை உணர்ந்த நம் மக்கள், இவர்களின் பெருமையை உணராதவர்களுக்கு, தக்கநேரத்தில் உரியவாறு தக்க மாற்றங்களை அமைதியாகச் செய்வதன்

மூலம் உணர்த்தியும் வந்துள்ளனர், எனவே, சம்பந்தப்பட்ட அணைபோன்றவர்கள் ஜீவநதிகளை நிரந்தரமாகத் தேக்கி வைக்கும் வலிமைநமக்குக்கிடையாது என்பதனை நினைவுகூர்தல் நல்லது.

**வரலாற்று வாழ்வு யாருக்கு :**

450 ஆண்டுக்கால வரலாற்றுச்சிறப்பு மிக்க சைவ ஆதீனம் தருமை ஆதீனம். இவ்வாதீனம் செய்து வந்திருக்கும் செந்தமிழ்ச் சிவநெறி வளர்ச்சிப்பணிகளும், சமூக-கல்வி வளர்ச்சிப்பணி களும் அளப்பரியன. இஸ்லாமியர் ஆட்சிக்காலத் தடைகளை யும், ஆங்கிலேயர் ஆட்சிக்கால அவ்வப்போதைய சட்டங்களை யும் திருவருளால் கடந்து உயிர்ப்போடு தருமைமண்ணில் உலவி வரும் குருமுதல்வரின் கருணை நிலையம் தருமையாதீனம். இறையருளின் வடிவாக விளங்கும் அருளாளரால் தோற்று விக்கப்பெற்ற ஒரு சிறந்த பண்பாட்டு நிலையத்தைப் பாது காக்கும் பொறுப்பும் – கடமையும் நாட்டுமக்கட்கும், நாடாள் வோருக்கும் உண்டு. ஒன்றை ஆக்கியவர்களையே வரலாறு பாராட்டிப் போற்றுமேதவிர அழிக்கமுனைபவர்களை அல்ல. சரித்திரத்தில் புகழ்பெற விரும்புவோர் சான்றோர் நெறிகளுக்கு அழிவு நேராதபடி பார்த்துக்கொள்ளவேண்டும்.

**தருமை நோக்கி அணி திரள்வீர் :**

தருமையாதீனக் குரு முதல்வரின் குருபூஜை விழா வரும் 24—5—81 ஞாயிறு அன்று சிறப்புற வழக்கம்போல் நிகழ்வுறும். அடுத்தநாள் மாகேஸ்வரபூஜையும், தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பட்டிணப்பிரவேசமாக எழுந்தருளி அருட்காட்சி வழங்கும் நிகழ்ச்சியும் நடைபெறும். மே 10 முதல் சமயப் பயிற்சி வகுப்பும், மே 15 முதல் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும், குருமுதல்வரின் திருக்கோயிலாகிய ஸ்ரீ ஞானம் பிகை உடனுறை ஸ்ரீஞானபுரீசுவரர் திருக்கோயிற்பெருவிழாவும் தொடங்கிச் சிறப்புற நிகழும். தமிழ்ப்பெருங்குடி மக்களும், சைவப்பேரன்பர்களும் தருமை நோக்கி அணிதிரண்டு வாரீர் என வரவேற்கிறோம். தமிழர்களுக்காக – தமிழ்மொழிக்காக – தமிழர் சமயத்திற்காகத் – தமிழ்ப்பண்பாட்டுக்காக வாழ்ந்திருக் கும் தருமையாதீனம் தமிழர்களின் கண்களாக விளங்குவது. கண்களைப் போற்றுவோம். கடமையை ஆற்றுவோம்.

காலம் பொன்போன்றது.
கடமை கண்போன்றது.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

**திருச்சிராப்பள்ளி வானொலிநிலையம் நிகழ்த்திவரும் குறள்நெறியில் "கோளில் பொறியில் குணமிலவே" என்ற குறள்பற்றி வழங்கிய**

# அருளுரை

**11—9—1980**

"வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்
ஓதத் தமிழால் உரைசெய்தார் — ஆதலால்
உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் உண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு."

திருவள்ளுவர் அருளிச்செய்த கடவுள்வாழ்த்துக் குறள்களில் ஒருகுறளைத் தலையாயது என்று நாம் கூறலாம். ஏனெனில், அது நாம் தலைபெற்ற பயனைக் குறிப்பிடுகிறது. 'எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்' என்றவகையில் உடல் உறுப்புக்கள் பலவற்றிலும் மிக்க சிறப்புடையது தலை ஒன்றே. அதனிடத்தில்தான் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகளும் அமைந்துள்ளன. அதனால் தலை பெற்றதன் பயன், அந்த ஐம்பொறிகளாலும் சுவை முதலிய ஐம்புலன்களை நுகர்வதே என நினைக்கின்றோம். ஆனால் திருவள்ளுவர் தலை பெற்றதன் பயனாக அதனைக் குறிப்பிடவில்லை.

இறைவனுடைய திருவடிகளில் அத்தலை பொருந்தும்படி வணங்குவதே, தலை பெற்றதன் பயன் எனத் திருவள்ளுவர் தெள்ளிதின் விளக்கிக் கூறுகின்றார். இக்குறளிலும், அவர் இக் கருத்தை எதிர்மறை முறையிலேயே வலியுறுத்திக் குறிக்கின்றார். அக்குறள்,

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை."

இறைவனுடைய தாளை வணங்காத தலைகள் பயனில்லாத தலைகளாகும் என இக்குறளில் குறிக்கின்றார். அதற்கு அவர் கூறும் உவமையையும் சிறிது சிந்தித்துப்பார்த்தல் வேண்டும். அவ்வுவமை, கோள் – இல் – பொறி என்பது, மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இவைகளையே பொறி என்று கூறுவர். இவை மக்களுக்கு எவ்வகையில் பயன்படுகின்றன எனின் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் புலன்களைத் தாம் ஏற்றுத் தம்மை உடையவனுக்கு அறிவிக்கும் முறையிலே பயன்படுகின்றன. ஆனால், இவை உடம்பில் அமைந்திருந்தும் ஊறு, சுவை, ஒளி முதலிய புலன்களைக் கொள்ளவில்லையாயின் அவை இருந்தும் என்ன பயன்? அஃதாவது ஒலியைக் கேளாத காது, ஒளியைக் காணாத கண், நாற்றத்தை அறியாத மூக்கு இவையெல்லாம் இருந்து பயன் என்ன? அதுபோலத்தான் இறைவனுடைய திருவடியை வணங்காத தலைகள் இருந்தும் பயனில்லை என்கின்றார் திருவள்ளுவர். தலைகள் பயனில என்று கூறாமல் 'குணம் இல' என்று கூறிய நயத்தையும் நோக்குதல் வேண்டும்.

இக்குறளில் திருவள்ளுவர் தலையைப்பற்றியே கூறியிருப்பினும் இனம்பற்றி வாழ்த்தாத நாக்கள், நினையாத நெஞ்சங்கள் முதலியவற்றையும் நாம் குறித்துக்கொள்ளும்படியே அமைத்துள்ளார். இவ்விடத்தில் நம் அப்பர்பெருமான் அருளிய 'திரு அங்கமாலையை' நினைவுகூர்தல் நலமாகும். மற்றும் அவர்,

" வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே"

என்று கூறியிருப்பதும் சிந்திக்கத்தக்கதாம். "வணங்கத் தலை வைத்து வார்கழல் வாய் வாழ்த்த வைத்து" எனவரும் திருவாசகமும் நினைக்கத்தக்கது. சேரமான்பெருமாள்நாயனார்,

" சிந்தனை செய்ய மனம் அமைத்
தேன்; செப்ப நாஅமைத் தேன்;
வந்தனை செய்யத் தலை அமைத்
தேன்; கை தொழ அமைத் தேன்;

பந்தனை செய்வதற் கன்பமைத்
தேன் ; மெய் அரும்ப வைத்தேன்
வெந்த வெண் ணீறணி ஈசற்கு
இவை யான் விதித்தனவே."

என்று ஆண்டவன் அருளிய மெய்யுறுப்புக்களை, இங்ஙனம் வழிபாடுசெய்ய அமைத்துக் கொண்டேன் என்று கூறுவதும் சிந்திக்கத்தக்கதாகும். பிற அருளாளர்கள் ஆண்டவன், தன்னை வழிபடுதற்பொருட்டு நமக்கு அருளிய உறுப்புக்களைக் கொண்டு அவ்விறைவனை வணங்குதல்வேண்டும் என்று கூறி யிருக்க, இச் சேரமான் பெருமாள் நாயனர் ஆண்டவனை வழிபட இவ்வுறுப்புக்களை இங்ஙனம் அமைத்துவிட்டேன் என்று பாடும்திறம் சிந்திக்கத்தக்கது. இதுபோன்று அனைவரும் இறைவழிபாட்டில் திண்ணிய உள்ளத்தராயிருத்தல் மிகவும் இன்றியமையாதது.

இங்கே இறைவனைத் திருவள்ளுவர் 'எண்குணத்தான்' எனக் குறித்தார். இவை முறையே தன்வயத்தனுதல், தூய உடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றும் உணர் தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை என வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. இவற்றுள் தன்வயத்த னுதல் என்பது – பூரண சுதந்திரம் உடையவனுய் இருப்பவன் என்பதைக் குறித்தது. தூய உடம்பினனுதல் என்பது – மாயா சம்பந்தமில்லாத அருள்திருமேனி கொண்டவன் என்பதை விளக்கியது. இயற்கை உணர்வினனுதல் என்பது – கண், காது முதலிய பொறிகளின் துணையின்றியே யாவற்றையும் உணரும் தன்மையன் என நின்றது. முற்றும் உணர்தல் என்பது – யாவற்றையும் நிறைவாக அறிபவன் எனக் குறித்தது. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் என்பது – மலமாயை களுக்கு உட்படாத பெருஞ்சிறப்பினைப் பேசியது. பேரருள் உடைமை என்பது – இறைவனது பெருங்கருணை கூறியது. முடிவில் ஆற்றலுடைமை என்பது – அவனது எல்லை காண மாட்டாத பேராற்றலை விளக்கியது. வரம்பில் இன்பமுடைமை என்பது – பேரானந்தப் பெரும்பொருள் அவனே என்பதை விளக்கியது. இவை உயிர்களுக்கு இல்லாமல் இறைவனுக்கே உரிய சிறப்புக்களாகும்.

மனிதன் எதனை நினைக்கின்ருனே அதன் தன்மைகளைப் பெறுகிருன் என்பது பொது உண்மை. "எத்பாவம் தத்பவதி"

என்பது இதனை விளக்க வந்த வடமொழி வாசகம். சார்ந்ததன் வண்ணமாகும் உயிர்கள் எண்குணத்தானை வணங்கின், அக்குணச் சிறப்புக்கள் அவ்வுயிர்களுக்கும் நாளடைவில் வந்துறும் என்பதே ஆசிரியரின் கருத்தாகும். எனவே அத்தகு சிறப்புடைய இறைவனை உயிர்கள் சார்ந்தும், துதித்தும், வணங்கியும் நலம்பெறக் கடமைப்பட்டுள்ளன. இன்று பலரும் கோயிலுக்குச் சென்று கண்காட்சியைக் கண்டுவருவதுபோல் தரிசித்து வருகின்றனர். கொடிமரத்துமுன் தலை தரைதோய வணங்குதல் வேண்டும். 'தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடி' என அப்பர் பெருமானும் இதனை வலியுறுத்தினர். இனியேனும் இக்குறளைச் சிந்தித்ததன்பயனாக, தலை நிலந்தோய வணங்கும் பழக்கம் உருவாதல் வேண்டும். அவ்வகையில் அனைவரும் ஆண்டவனை மனம், மொழி, மெய்களால் வணங்கிஉடல்பெற்ற பயனைப் பெறுவார்களாக.



---

## பார்வையாளர் குறிப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

### திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானம்

அருள்மிகு அமிர்தகடேசுவரர் மற்றும் அன்னை அபிராமியின் திவ்விய தரிசனம் கண்டு மெய்மறந்த பேருவகை பெற்றேன். நல்லமுறையில் திருக்கோயில் பராமரிக்கப்பட்டு வருவதுகுறித்து, மனநிறைவு பெறுகின்றேன். இறைஅருள் பக்தகோடிகளை உய்விக்க இறைஞ்சுகின்றேன்.

**(ஒ-ம்) வே. கதிர்வேல்**

புதுவைமாநில கூட்டுறவு செய்தித்துறை மற்றும்
6—5—81 அறங்காவல்துறை அமைச்சர், புதுவை.

★

இக்கோயிலைத் தரிசிக்கும் வாய்ப்பு கிடைத்ததற்கு ஆண்டவனுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். திருக்கோயிலை நல்ல முறையில் பராமரித்துவருவது மிக்க மகிழ்ச்சி.

(ஒ-ம்) **வ. ச. மாணிக்கவாசகம்.**

4—5—81 மாவட்ட வருவாய் அலுவலர், தஞ்சை.

# குறிகளும் அடையாளமும்

சித்தாந்தப் புலவர்மணி,

திரு. ந. ரா. முருகவேள் M. A., M. O. L.

" குறிக ளும்அடை யாளமும் கோயிலும்,
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்,
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்,
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே? "

— திருநாவுக்கரசர்.

**முன்னுரை :**

மனித வாழ்வில் ' குறிகளும் அடையாளமும் ', இன்றியமை யாதனவாகச் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன. குறி என்பது, பெயர் (Names). அடையாளம் என்பது, ஒரு பொருளேயோ அல்லது கருத்தையோ விளக்கிக் காட்டுதற்குப் பயன்படுத்தப்பெறும் ஒருவகை ஒப்புமைப்பொருள் (Symbol). ஒவ்வொரு பொருளுக்கும் பெயர்வைக்கின்றோம்; அடையாளம் பொறிக்கின்றோம். பெயரும் அடையாளமும் இல்லேயேல், வாழ்வில் பலவகைக் குழப்பங்களும், தலேதடுமாற்றங்களும் நிகழும் என்பது ஒருதலே.

**அடையாளங்கள் :**

— மனிதனின் சாதனேகள், அடையாளப்பொருள்களே அவன் பயன்படுத்தும் முறையிலேயே அமைகின்றன. (1) மனிதனின் செயல்களுள், அடையாளப் பொருள்களேக்கண்டு அமைக்கும் பணியும், உண்ணுதல் காணுதல் அல்லது இயங்குதல் என்பன வற்றைப்போல, முதன்மையான தொன்ருகத் திகழ்கின்றது. அறிவின் அடிப்படையான செயல் முறையாக விளங்கும் இத்தொழிலானது, இடைவிடாமல் எப்போதும் நடைபெற்றுக் கொண்டேயிருக்கின்றது (2).

---

(1) " Man's achievements rest upon the use of symbols "

— Alfred korzybski.

(2) " The symbol-making function is one of man's primary activities, like eating, looking, or moving about.

மனிதன் முதன் முதலில் பேசக் கற்றுக்கொள்ளும் முன்னர்த் தன்னுடையஎண்ணங்களைச் சைகைகளினுலும்( Gestures ), முகக் குறிப்புக்களினுலும் ( Grimaces ), பிறவற்றினுலும் உணர்த்தி வந்தான். பின்னர், படிப்படியே நாகரிகம் அடைந்து பேசக் கற்றுக்கொண்டான். தன் எண்ணங்களுக்குச் சொற்களையும், சொற்களுக்கு எழுத்துக்களையும் அடையாளப் பொருள்களாக அமைத்துக்கொண்டான். ஆனுல் மிகப் பழங் காலத்தில், முதன் முதலிலேயே மனிதன் எழுத்துக்களையோ, சொற்களையோ எழுதத் தொடங்கவில்லை. கருத்துக்களையே எழுதினுன்.

## அடையாள முறைகள் :

ஓவியங்கள் எழுதி அவற்றின் வாயிலாகவே, பழங்கால மக்கள் தம் கருத்தைப் புலப்படுத்தி வந்தார்கள். நீர்வேட்கையைக் குறிக்க, நாக்குப்போல் வளைந்த கோடு வரைந்து, அதன்மேல் நீரைக் குறிப்பிட இரண்டுபுள்ளிகள் வைப்பர். 'கேள்' என்று கூறுவதற்கு, ஒரு கதவின் அருகே அமைந்த காது எழுதப்படும். நட்பைக் குறிக்க, இரண்டு கைகள் இணைத்து வரையப்பெறும். அழுகையை உணர்த்தக் கண்ணும், நீர்த் துளிகளும் சேர்த்து எழுதிக்காட்டுவர். ஒளியைச் சுட்டுவதற்குச் சூரியனையோ, சந்திரனையோ வரைவர். இக்காலத்தில் செய்தித்தாள்களிலும் இதழ்களிலும் வெளியிடப்பெறும் கருத்தோவியங்கள் ( Cartoons ) முதலியன, அடையாளக் குறிப்பு முறையின் ( Symbolism ) சிறப்பினை எண்ணி உணர்தற்குத் துணைபுரிவன ஆகும்.

சமயத்துறையில் அடையாளக் குறிப்பு முறையானது ( Symbolism ) மிகவும் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது. மாற்றம் மனம் கடந்து, எண்ணியுணர்தற்கும் கூறியுணர்த்துதற்கும் அரியநிலையில் விளங்கும் இறைவனைப்பற்றிய நுண்பொருட் கருத்துக்களையெல்லாம், நம் முன்னோர்கள் எளிய இனிய சிறுசிறு அடையாளங்களால், நன்கு இனிது குறித்து வைத்து விளக்கியுள்ளனர்.

## அடையாள நுண்பொருள்கள் :

உதாரணமாக, கடவுள் என்னும் முழுமுதற் பொருளின் இயல்பைக் குறிப்பிடுதற்கு, முன்னைக் கால மக்கள் வளைவு

---

It is the fundamental process of the mind and goes on all the time"

— Susanne K. Langer.

இல்லாமல் நேரான ஒரு செங்கோலை எழுதி, பின்னர் அதன்மீது ஒரு கண்ணையும் வரைந்து வைப்பர் (3). கடவுள் நீதிநெறி தவருதவர்; நேர்மை மிக்கவர்; விருப்பு வெறுப்பு இல்லாதவர்; எல்லோரையும் சமமாகக் கருதி நடத்துபவர்; தீவினை செய்பவர்க்குத் தண்டனையாகத் துன்பத்தையும், நல்வினை செய்பவருக்குத் தண்ணளியாக இன்பத்தையும் வழங்குபவர். அவர் எல்லாக் காலத்திலும், எல்லா இடத்திலும், அவரவர் செய்கின்ற செயல்களை எல்லாம் பார்த்துக்கொண்டு இருக்கின்றூர்; அவரை ஒருவரும் ஏமாற்றிவிட முடியாது என்பன போன்ற கருத்துக்களை எல்லாம், இச்சிறு குறிப்படையாளத்தின் மூலம் பண்டைக்கால மக்கள் உணர்ந்தும், உணர்த்தியும் இருத்தல் காணலாம். இஃது எத்துணை வியப்பிற்குரியது!

கண்காணி இல்லென்று கள்ளம் பலசெய்தார் ;
கண்காணி இல்லா இடமில்லை காணுங்கால் ;
கண்காணி யாகக் கலந்தெங்கும் நின்ருனைக்
கண்காணி யாகக் களவொழிந் தாரே.

— திருமந்திரம்.

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் ! யாவரையும்
வஞ்சித்தோம் என்று மகிழன்மின் – வஞ்சித்த
எங்கும் உளன்ஒருவன் காணுங்கொல் என்றஞ்சி,
அங்கம் குலைவ தறிவு.

— குமரகுருபரர்.

என்பன போன்று, நம் சமயப் பெருஞ் சான்ருேர்கள் பலரும் அறிவுறுத்தும் அரும்பெருங் கருத்துக்கள் எல்லாம், எளிய இனிய இச் சிறிய அடையாளத்தின் மூலம் செவ்விதின் விளக்கப்பட்டுள்ளன அன்ருே?

## அடையாளத் திறவுகோல்

"நாம் நம்முடைய பெரியபெரிய வேத வேதாந்த நூல்களை எல்லாம், ஒருகால் இழந்துவிட நேர்ந்தாலுங்கூட, அடையாளக் குறிப்பீடுகள்மூலம் அவைகளை நாம் மீளவும் உருவாக்கி முழுவதாகப் பெற்றுவிட முடியும். நம்முடைய முன்னேர்கள்

---

(3) "The ancient hieroglyphic for God was the figure on an Eye upon a Sceptre, to denote that he sees and rules all things".

— Bulter.

நம்பொருட்டு அமைத்துவைத்துவிட்டுச் சென்றுள்ள, அடையாளப் பொருள்களின் நுண்பொருட் சிறப்புக்களைத் திறந்து காண்பதற்குரிய அறிவுத்திறன் ஆகிய திறவுகோல் மட்டுமே நமக்குத் தேவை. இவ்வடையாளக் குறிப்புகளில்தான், நம் முன்னோர்களின் அரும்பெரும் அறிவுச்செல்வங்கள் அனைத்தும் பொதிந்து போற்றி வைக்கப்பட்டுள்ளன " (4) என்று அறிஞர்கள் பலரும் கூறுகின்றனர்.

### சின்முத்திரை :

உதாரணமாக, சைவசித்தாந்தம் என்னும் அரிய பெரிய தத்துவக் கொள்கையிற் பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களைப்பற்றிய உண்மைகளை, எத்தனையோ நூல்கள் விரித்துரைத்து விளக்குகின்றன. அவை அனைத்தையும் ' கடுகைத் துளைத்து எழுகடலையும் புக விடுதல்' போல, நம் அங்கை விரல்களைக்கொண்டே 'சின்முத்திரை' என்னும் அடையாளத்தினால், நம்முடைய சமயப்பெரியோர்கள் சுருக்கமாகவும், தெளிவாகவும் யாவருக்கும் விளங்குமாறு புலப்படுத்தியுள்ளனர். சிவபிரானின் திருவுருவங்களுள் ஒன்றாகிய தட்சிணாமூர்த்தம் என்பதற்கே தனிச் சிறப்பையளித்து நிற்பது, இந்தச் சின்முத்திரை அடையாளமேயாகும்.

### சின்முத்திரையின் நுண்பொருள்கள் :

சின்முத்திரையில் கட்டைவிரல் இறைவனையும், சுட்டுவிரல் உயிர்களையும், நெட்டை விரல் ஆணவமலத்தினையும், மோதிர விரல் மாயா மலத்தினையும், சுண்டுவிரல் கன்ம மலத்தினையும் உணர்த்துகின்றன. கட்டைவிரல் தனித்து இருப்பது பிற விரல்கள் தொழிற்படுதற்கு மிகவும் இன்றியமையாதது ;

---

(4) "Even if we have lost our books on Veda and Vedanta we Could evolve the whole thing again from the symbols we possess, provided we had the tiny key to unlock these sacred mysteries. The hoariest and most ancient wisdom is thus enshrined in these unmistakable symbols, and when we understand them aright, we are enabled to test and know which is the true Philosophy and which the true religion "

— J. M. Nallaswami Pillai, B. A. B. L
Studies in Saiva Siddhanta, P 242

அதன் துணையின்றிப் பிற விரல்கள் இயங்கமாட்டா; ஆதலின் அது கடவுளைக் குறிப்பதாயிற்று. உயிர்கள் இறைவனைப் போலச் சத்தும் சித்துமாக இருப்பன. ஆயினும் கடவுளைச் சேராமல் மலங்களோடு சேர்ந்து துன்புறுகின்றன. கடவுளைப் போல முற்றறிவின்றி, எதனையும் முன்னிலையில் சுட்டிமட்டுமேஅறியும் தன்மையுடையன. ஆதலின் அவற்றைச் சுட்டுவிரல் உணர்த், துவதாயிற்று. நெட்டைவிரல் ஒன்றற்கும் பயன்படுவதின்றி வறிதே நீண்டு வளர்ந்து முனைந்து நிற்பதாகலின், அஃது ஆணவ மலத்தைக் காட்டுதல் பொருத்தமே. மாயா மலத்தினாலேயே நமக்குத் தனு கர்ண புவன போகங்கள் அனைத்தும் அமைத லாலும், ஆணவமலம் கழிதற்பொருட்டு, அதன்பின்னர் வந்து உயிர்கள்பாற் பொருந்துதலாலும், அடுத்த விரல் மாயையைக் குறிப்பதற்கு ஏற்றதாக உள்ளது. அதனாலேயே மயக்கத்தைக் குறிக்கும் மோதிரம் அவ்விரலில் அணிவிக்கப்படுகின்றது. ஆணவம் மாயை என்னும் மலங்களின் பின்னரே, உயிர்களின் இயல்பான விருப்புவெறுப்புகளாலும் நற்செயல் தீச்செயல்களா லும் கன்மமலம் வந்துசேர்தலின், அவையிரண்டையும் குறிக்கும் விரல்களுக்குப் பின்னர் உள்ள சுண்டுவிரல், கன்மமலத்தைச் சுட்டுவதாக அமைந்தது. மேலும் மலக்கழிவு நேருங்கால், முதலிற்கன்மமும்,பின்னர்மாயையும், அதன்பின்னர் ஆணவமும் முறையே கழிந்தபின்பே, இறுதியில் உயிரானது இறைவனை அடைதலின், அவ்வியல்பினை உணர்த்துதற்கும் விரல்களின் அமைப்புமுறைபொருந்துவதாக இருக்கிறது. சைவசித்தாந்தத் தின்படி முத்திநிலையிலும் உயிர்கள் இறைவனுக்கு அடிமையே யாம் ஆதலின், அதனை உணர்த்துதற்குச் சின்முத்திரையில் கட்டைவிரலின் அடியினைச் சுட்டுவிரலின் நுனியானது சென்று தொட்டு வளைந்து நிற்கின்றது. இன்னோரன்னைய நுண்பொருள்களை உணர்த்தும் "குறிகளும் அடையாளமும்" பற்றி எண்ணி யுணருந்தோறும், நமக்கு எத்தனை இறும்பூது விளைகின்றது.

**பட்டினத்தார் :**

சிவபெருமானின் திருவுரு அமைப்பில் விளங்கும் இத்தகைய அடையாள நுண்பொருட் குறிப்புக்கள் சிலவற்றை, அரும் பெறல் ஞானச் செல்வரும், அருட்பெருங் கவிஞரும் ஆகிய பட்டினத்தடிகள், பின்வருமாறு விளக்கியருள்கின்றார்.

"சிவபிரான், சடையின்மீது சந்திரனைச் சூடியிருத்தல், தூய பேரறிவை உணர்த்துகின்றது. ஆனேறு (ரிஷபம்) ஏறுதல், அறத்தின் பயனாக விளங்கும்தலைவன் என்பதைக் குறிக்கின்றது.

அவன் அவள் அது என்னும் மூவகையாலும் வழங்கப்பெறுதல், பொதுநிலைமையன் என்று புலப்படுத்துகின்றது. முக்கண்களும் ஆகவநீயம் தட்சிணுக்கினி காருகபத்தியம் என்பவற்றைச்சுட்டு கின்றன. மான் ஏந்தியிருத்தல், நாத தத்துவத்திற்கும், வேதப் பொருள்களுக்கும் தலைவன் என்பதை விளக்குகிறது. மூவிலைச் சூலம் ஏந்துதல், மும்மூர்த்திகளும் தானேஆதலை மொழிகின்றது, நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு, நிலா, பகலோன், உயிர் என்னும் எண்வகைப் பொருள்களின் வடிவமாகி அட்டமூர்த்தி யாகத் திகழ்பவன் என்பது, இவ்வுலகின் உண்மைப்பொருளாக ஒளிர்பவன் என்பதனை அறிவிக்கின்றது எனக் கூறுகின்ருர் பட்டினத்தடிகள்.

அவர்தம் திருமொழி பின்வருமாறு :

" தூமதி சடைமிசைச் சூடுதல், தூ நெறி
ஆம்மதி யான்என அமைத்தவாறே;
அறன்உரு வாகிய ஆன்ஏறு ஏறுதல்,
இறைவன் யான்என இயற்றுமாறே;
அதுஅவன் அவள்என நின்றமை, யார்க்கும்
பொதுநிலை யான்என உணர்த்திய பொருளே;
முக்கணன் என்பது முத்தீ வேள்வியில்
தொக்கது என்னிடை என்பதோர் சுருக்கே;
வேத மாம்மறி ஏந்துதல், மற்றதன்
நாதன் நான்என நவிற்றுமாறே;
மூவிலை ஒருதாட் சூலம் ஏந்துதல்,
மூவரும் யான்என மொழிந்த வாறே;
எண்வகை மூர்த்தி என்பது இவ்வுலகினில்
உண்மை யான்என உணர்த்தியவாறே "

— திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது.

முடிவுரை :

இதுகாறும் கூறியவாற்ருல், திருநாவுக்கரசர் பாடியுள்ளபடி 'குறிகளும் அடையாளமும்' சமயநெறியுணர்ச்சிக்கு இன்றி யமையாதனவாதலையும், அவற்றின்பால் அமைந்துள்ள தத்துவ நுண்பொருள்கள் அறியுந்தோறும் பெரும்பயன் தருவன வாதலையும் உணர்ந்து, நாம் அவற்றையெல்லாம் நன்கினிது போற்றி நலம்பெற முயல்வோமாக!



கட்டுரை எண். 16.

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A., B. Lit,
D. P. P. A,. D. U. N. I. U.

**வந்திப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்;**
**சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர்; சிந்தையுள்ளே**
**பந்திப்பவர் அழியாப் பரமானந்தர்; பாரில் உன்னைச்**
**சந்திப்பவர்க் கெளிதாம் எம்பிராட்டி நின் தண்ணளியே. (14)**

**அ வந்திப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்.**

(1) உன்னை வழிபடுவோர் வானவர்களாகிய தேவர்களும் 'தானவர்கள்' எனப்படும் அசுரர்களும் ஆவார்கள்.

(2) காச்யபமுனிவருக்கு 'தநு' என்ற பெண்ணின்மூலம் தோன்றியவர்கள் ஆதலால் அசுரர்கள் தானவர்கள் என அழைக்கப்பட்டனர். அவ்வாறே, திதிதேவியின் மூலமாகத் தோன்றியவர்கள் 'தைத்யர்கள்' எனப்பட்டனர்.

(3) பிறர்நலம் பேணல் முதலிய நற்பண்புகளால் எவரும் வானவர் ஆகலாம். வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவான் என வான்மறை புகலும். தன்னலம் வன்முறை முதலிய தீப்பண்புகளால் எவரும் அசுரராகிவிடுவார்கள். "அழிவன செய்தலால் அரக்கராகியேஇழிக" என அகத்தியன் சபிக்கவே தாடகையும் அவளது புதல்வர்களும் அரக்கர்களானூர்கள் என்று கம்பர் காட்டுவார்.

தங்கள் பண்புகளாலேயே தேவரும் அசுரருமாக ஆகின்றனர் என்பது தோன்ற இங்கும் "வானவர் தானவர் ஆனவர்கள்" என்கிறுர்.

(4) வானவர்கள் தங்கள் பதவிகள் நிலைக்கவும் அவ்வப் பொழுது தோன்றும் அசுர எதிரிகளிடமிருந்து காத்துக் கொள்ளவும் தேவியினை வழிபடுகின்றனர். பண்டன், மகிடன் முதலான அசுரர்களை அழிக்கத் தேவர்கள் வந்தித்த வரலாறுகளைப் புராணங்கள் விரிவாகக் கூறுகின்றன.

(5) அவ்வாறே அசுரர்களும் எண்ணிலா ஆற்றல் பெற அன்னையினை வந்திக்கின்றனர். தானவர்கள் வந்தித்து உதவி பெற்ற வரலாறுகளும் புராண இதிகாசங்களில் உண்டு.

(A) சூரபதுமனின் மகனான அக்னிமுகன் என்பவன் சிறு வயதில் காளிதேவியை வந்தித்து வரங்கள் பெற்றான். அதன் பயனாக அவன் வீரபாகுதேவருடன் போரிடும்பொழுது காளி தேவி போர்க்களம் புகுந்து அவனுக்குத் துணைநின்றாள். வரம் அளித்ததற்கு ஏற்ப உதவிவிட்டு, பின்னர் வீரபாகுதேவரை வாழ்த்திச் சென்றாள் என்பது கந்தபுராணம் காட்டும் சான்றாகும்.

(B) வங்கமொழி இராமாயணம் இராவணனையே தேவி உபாஸகனாகக் காட்டுகிறது. போர்க்களத்தில் அனைத்தையும் இழந்து தனியாகநின்ற இராவணனுக்குத் துர்க்காதேவி தேர்ச் சாரதியாக அமர்ந்து புத்துணர்ச்சியுடன் இராமனை எதிர்த்துப் போரிட உதவினாள். பின்னரே இராமனின் வேண்டுகோளை யேற்று இறங்கிச் சென்றாள் என வங்க ராமாயணம் தானவன் வந்தித்து வரம்பெற்ற வரலாற்றினை விளக்குகிறது.

(6) திருமூலரும் திருமந்திரத்தில் "வந்தடி போற்றுவர் வானவர் தானவர்" என்று குறிப்பிடுகின்றார்.

### ஆ. சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர்

(1) உன்னைத் தியானிப்பவர்கள் நான்முகப் பிரமனும் திருமாலும் ஆவார்கள்.

(2) ஹரிப்ரம் மேந்த்ர ஸேவிதா – திருமால், பிரமன், இந்திரனால் வழிபடப்படுபவள் என்று சகஸ்ரநாமம் போற்றுகிறது.

(3) தங்களது தொழில்களான காத்தல் படைத்தலைத் திருமாலும் பிரமனும் செவ்வனே புரிய அவளது அருளினை வேண்டித் தியானிக்கின்றனர்.

(4) பரசுராமாவதாரத்தின்பொழுது 'பரசுராம கல்ப சூத்ரம்' என்னும் அம்பிகை வழிபாட்டுநூலை இயற்றியவர் திருமாலே. அகத்தியருக்கு அன்னையின் ஆயிரம் நாமங்களை உபதேசித் தவரும் ஹயக்ரீவ வடிவமேற்ற திருமாலே. எனவே அவருக்கு எப்போதும் அன்னையைப் பற்றிய சிந்தனை இருப்பதில் வியப் பில்லை.

(5) 'நாரம்' என்றால் தண்ணீர். நாரணர் என்றால் தண்ணீரில் வாழ்பவர் என்று பொருள். அதாவது பிரளய வெள்ளத்தில் மிதந்தவர் அல்லது கடலில் பள்ளிகொண்டவர்

எனவும் பொருள்படும். பிரளய வெள்ளத்தில் தாலாட்டி அருள்செய்த அன்னையினை மறவாது சிந்திக்கிறார் நாரணர்.

(6) செருக்கால் 'தானே பெரியவன்' எனக்கூறி இறைவனின் திருமுடியைக் காணக்கிளம்பிய நிலையிலும், கருவத்தால் கந்தனைப் பணியாது வணங்கிச்சென்ற நிலையிலும் பிரமனை 'நற்றிசைமுகன்' எனக்கூறமுடியாது. அந்நிலையில் அவனுக்குச் சிந்திக்கும் எண்ணமும் இல்லை. ஆனால், பட்டு அறிந்தபின்பு – பரம் பொருளை அறிந்தபின்பு அன்னையினைச் சிந்திக்கலானான். தன்னகந்தை விட்டுத் தற்பரையினைச் சிந்திக்கத் தொடங்கிய பொழுதே அவன் நல்லவன் ஆகிவிட்டான். தற்பெருமையில்லை; செருக்கில்லை. எனவே அவன் நற்றிசைமுகன் ஆகிவிட்டான்.

**இ. சிந்தையுள்ளே பந்திப்பவர் அழியாப் பரமானந்தர்.**

(1) உள்ளத்தில் யோகத்தால் பிணைப்பவர் அழியாப் பரமானந்தர் ஆவார்.

(2) 'பந்தித்தல்' என்றால் கட்டுதல் என்பது பொருள். யோகியர் அவளை யோகத்தால் உள்ளத்தே கட்டிவிடுவதால் அவர்கள் பேரானந்தத்தை எய்துகின்றனர். அதன் காரணமாகவே அவர்களுக்கு 'ஆனந்தநாதர்' என்னும் தீட்சாநாமம் அளிக்கப்படுகிறது என முன்னரே கண்டோம். அவளது உபாஸகர்கள் யோகத்தால் பரமானந்தர்கள் ஆகின்றனர் என்பது கருத்து.

(3) இங்குப் பரமானந்தர்என்றது சிவபெருமானையே எனக் கொண்டாலும் பொருந்தும். யோகிகளின் தலைவரும், வழிகாட்டியும், முன்னோடியும் அவரே. அவர் தட்சிணாமூர்த்தியாக யோகவடிவம் கொண்டபொழுது சிந்தையுள்ளே அன்னையையன்றி வேறு யாரைப் பந்தித்திருப்பார்?

சிவனும் சக்தியும் இணைந்த வடிவம் அர்த்தநாரீச மூர்த்தம். சக்தியுள் சிவன் அடங்கிய உருவம் 'காஞ்சி காமாட்சி' மூர்த்தம். (காஞ்சி காமாட்சிகோவிலில் இறைவன் சந்நிதி இல்லாமை நோக்குக.) அவ்வாறே சிவனுள் சக்தி அடங்கிய உருவம் தட்சிணாமூர்த்தி வடிவம் ஆகும். எறிதரங்கம் உடுக்கும் ஈசன் இதயத்து உயிர் ஓவியமான அன்னையினை எழில் ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் வடிவம் அஃதே. பந்தித்துப் பரமானந்த மூர்த்தியாகக் காட்சி தருவதும் அப்பெருமானே. என்றும் அழியாதவனும் அவனே. ஆதலால் "அழியாப் பரமானந்தர்" என்றார்.

(4) சாக்த வழிபாட்டில் 'சரியானந்த நாதர்' என்னும் தீட்சாநாமத்துடன் சிவபெருமானே குருமண்டலத்தில் பூஜிக்கப் படுகிறார். எனவே முதல் உபாஸகராகவும், குருவாகவும் அருள் பாலிக்கும் அனைவருக்கும் வழிகாட்டியாய் முன்னோடியாய் சிந்தையுள்ளே அன்னையினைப் பந்திக்கின்றார்.

(5) மற்றும் யோகத்தால் அவளைப் பந்திக்கும் யோகிகள் அழியா முத்தியானந்த நிலையினை எய்துவதாலும் "பந்திப்பவர் அழியாப் பரமானந்தர்" என்றார்.

**ஈ. பாரில் உன்னைச் சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி நின் தண்ணளியே.**

(1) ஆனால், இப்பூவுலகில் உன்னைத்தரிசிக்கும் அடியவர் களுக்கு உனது குளிர்ச்சியுடன் கூடிய அருள் எளிதில் கிட்டி விடுகிறது.

(2) வானவர்களும் தானவர்களும் பலவாறு வழிப்டுவர். திசைமுகனும் திருமாலும் தியானிப்பர். யோகிகள் பந்திக்க அரும்பாடுபடுவர். ஆனால் இப்பூமேல் உன்தரிசனமே, அர்ச்சா மூர்த்த தரிசனமே உனது தண்ணருளை எளிதில் கிடைக்கச் செய்துவிடுகிறது. இது என்ன விந்தை !

(3) எம்பெருமான் எளிதில் – விரைவில் அருளுவதால் 'ஆசுதோஷி' எனப் பாராட்டப்படுகிறான். அவ்வாறே எம் பிராட்டியாகிய நினக்கு "ஷிப்ரப்ரஸாதினி" – விரைவில் அருள் பவள் எனத்திருநாமம் உண்டு, பாரில் நீயும் எளிதில் அருள் பாலிக்கிறாய் என வியக்கிறார்.

(4) தேவி தன்னடியார்களுக்குத் தரிசித்த மாத்திரத்தில் தண்ணருள் கிடைக்கத் திருவுள்ளம்கொண்டே 'ஐம்பத்தொரு சக்திபீடங்களிலும் ஏனைய திருத்தலங்களிலும் எழுந்தருளி யிருக்கிறாள். மனிதர்கள் வேறு உலகங்களுக்குச் சென்று தவமியற்றியதாக வரலாறுகள் இல்லை. ஆனால் வானவரும், பிற உலகத்தாரும், திருமாலும், பிரமனும், இந்திரனும் பூவுலகில் வழிபட்டு அவள் அருளைப்பெற்ற வரலாறுகள் பல காணப் படுவதே, அவள் பூவுலகில் எளிதில் அருள்பாலிக்கிறாள் என் பதற்குத் தக்க சான்றாகும்.

(5) தரிசிப்பவர் என்பதற்குப் பதிலாக இங்கு 'சந்திப்பவர்' என்றதன் உட்கருத்து என்ன? ஒருவரை "ஏதோ போகும்

வழியிலீ சந்தித்தேன்" என்பதுபோல் அதிக முயற்சியின்றித் தற்செயலாகவே தரிசித்தவர்களுக்குங்கூட அருள்பாலிக்கிருள்.

(6) மற்றும் மன்னர்களேயும், பிரபுக்களேயும் சந்தித்துப் பயன்பெற விரும்புகின்ற மக்களுக்கு அவர்கள் உதவுவது அரிதாகவும், அடையமுடியாததாகவுங்கூட ஆகிவிடும். ஆனல் அன்னேயினேச் சந்திப்பவர்க்கு நினேத்தவை நிறைவேறுதல் எளிது.

(7) நுனிமரத்திலிருந்து அடிமரத்தைவெட்டிய அறிவிலியாய் இருந்த இடையன் தனது முதலிரவன்று, மனேவியாய் வாய்த்தவளே வழிகாட்ட உஜ்ஜயினி காளியைச் சந்தித்தான். அன்றிரவே அவனே மாகாகவிஞனுக ஆக்கி, 'கவிகாளிதாஸன்' எனக் காசினியறியவைத்தது அவளது எளிதான தண்ணளி.

(8) காமக்கோட்டத்தில் அர்த்தஜாம பிரஸாதம் வாங்க வந்த ஊமையொருவனேக் கவிஞனுக்கிப் 'பஞ்சசதி' பாட வைத்து முககவியெனப் போற்றச் செய்தது அவளது எளிதான தண்ணளி.

(9) வயிரபுரக் காளிகோவிலில், கம்பங்கொல்லே காக்க வந்தபொழுது படுத்து உறங்கிய சிறுவனேக் கவிச்சக்ர்வர்த்தியாக்கியது அவளது எளிதான தண்ணளி.

(10) சிங்கை நமசிவாயப் புலவருக்கு அவரது மகளின் வடிவில் சென்று அன்னம் பரிமாறியது அவளது எளிதான தண்ணளி.

(11) பாஸ்கரராயர் பட்ட கடனே அவரது மனேவியின் வடிவில் சென்று அடைத்து வந்தது அவளது எளிதான தண்ணளி,

(12) ஏன்? எழுபத்தெட்டு பாடல் பாடும் நேரத்திற்குள் அபிராமிபட்டருக்கும் நிலவினேக் காட்டியது அவளது எளிதான தண்ணளிதானே?

(13) அர்ச்சாமூர்த்த தரிசனத்தின்மூலம் அவள் பூவுலகில் தன் கருணேயினே எளிதில் பொழிகிருள் என்பதே இப் பாடலின் திரண்ட கருத்து.

இப்பாடலின் பாராயண பலன் 'க்ஷேத்ராடனம்' என்னும் தலயாத்திரை நிறைவேறுதல் ஆகும்.

# தாயுமானவர் போற்றும் சைவநெறி

வித்துவான். திரு. மு. வைத்தியநாதன், திருச்சி.

**தாயுமானவர் :**

தேவார ஆசிரியர்கள் காலம்வரை உணர்வு பூர்வமாக இருந்த சைவசமய நெறி, சித்தாந்த ஆசிரியர்கள் காலத்தில் அறிவுபூர்வமாக ஆராய்ந்து உண்மைகாணும்நிலைக்கு உயர்ந்தது. இந்தச்சமயத்தில் மேலும் பலர் தோன்றிச் சைவத்தில் சமயப் பொதுமை காண முற்பட்டனர். அவர்களில் ஒருவர்தான் அருளாளராகிய தாயுமானவர். இவர் சைவஞ்சார்ந்த பொதுமை நெறியினர். முழுமுதற்கடவுளாகிய சிவபிரானைத் தன் வழிபடு கடவுளாகக் கொண்டவர்.

**மரபுபோற்றுதல் :**

தாயுமானவர் பாடிய திருப்பாடல்கள் 1452. இவை 56 தலைப்புகளில் அடங்கிக் காணப்படுகின்றன. தாயுமானவர் தனக்குமுன்னே, இந்தத்தமிழ்நிலத்தில் வாழ்ந்த அருளாளர்கள், சைவசமயத்தில் வகுத்துக்கொடுத்த இறைமைநெறியிலிருந்து மாறுபடாமல், முன்னோர் மொழிபொருளைத் தானும் பொன்னே போல் போற்றிப் பாடியவர். சைவசமயத்துத் தோத்திரப்பாடற் செய்திகளையும் சாத்திரநூற் செய்திகளையும் தன் திருப்பாடல் களில் வரிக்குவரி, சொல்லுக்குச்சொல் தெரிவித்து, மக்களை இறைமைநெறியில் செலுத்தி வழிகாட்டியவர்.

**புதுமைபெறுதல் :**

பல்வேறு சமய முடிவுகளையெல்லாம் தன்பாற்கொண்ட மிகவுயர் சமயமாகிய சைவசமயம் சங்ககாலத்திற்குப் பின், மேலும், சிறந்த சமயநெறி ஆயிற்று. தமிழகத்தின் பெரும் பகுதியைப் பல்லவமன்னர்கள் அரசுசெலுத்திய காலத்தில், சைவசமயம்வேதநெறியையும் ஏற்றுக்கொண்டு ஒரு புதுமெருகு பெற்றது. வேதநெறி சைவநெறி இரண்டும், இரண்டற்று ஒன்றேயாம் நிலை அடைந்தது.

**வேதநெறி சிவநெறி :**

நால்வர் பெருமக்களில் தேவாரம் பாடிய முதல்வராகிய திருஞானசம்பந்தப்பெருமான் வேதநெறிக் கருத்துக்களையும்

சிவாகமநெறிக் கருத்துக்களையும் தமது திருப்பதிகங்களில் அமைத்துப் பாடியுள்ளார்.

அருள்நூல்பாடிய சேக்கிழாரடிகள் திருஞான சம்பந்தர் வரலாற்றைப் பாடத்தொடங்கும்போது, வேதநெறி தழைக்கவும் மேன்மைகொள் சைவத்துறை நாட்டில் விளங்கவும் சிவ பரம்பரை சிறந்திடவும் ஞானசம்பந்தர் சீகாழியில் அவதரித்தார் என்று தெரிவிக்கின்றார்.

வேதம் என்பது அறக்கோட்பாடுகள். நெறி என்பது அவைகளை நெறிப்படுத்துவது அல்லது ஒழுங்குபடுத்துவது. சைவம் சிவனுடன் தொடர்புடையது ; துறைஎன்பது வழியாகும். இறைவனை அடைதற்கு வழிகூறும் நெறி சைவநெறி. நெறி யறிந்து ஒருவழிச் சென்று சிவத்தை அடையக் கருவிகளாகப் பயன்படும், நெறியும் துறையும் ஆகிய இந்த இரண்டிற்கும் வேறுபாடு இல்லை என்று கூறுகின்றார்.

" வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்
பூதபரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம் "

என்பது அவர் திருப்பாடல்.

### திருமூலர் சமயம் :

திருமூலர் சைவசமயத்தைத் தன் சமயமாகவும் சிவ பெருமானை முழுமுதல் தெய்வமாகவும் ஏற்றுக்கொண்டவர். சைவம், வேதங்களையும் ஆகமங்களையும் பிரமாண நூல்களாகக் கொண்டது என்றும், சித்தாந்த சைவர்கள் வேதத்தைப் பொது நூலாகவும் ஆகமங்களைச் சிறப்பு நூலாகவும் கொண்டவர்கள் என்றும் கூறியவர். வேதவித்தகராகிய ஸ்ரீகண்டர்கூட வேதத் திற்கும் சிவாகமத்திற்கும் வேறுபாடுகாணவில்லை. சிவாகமங்களை வேதமாகிய பசுதரும் பால் என்றே கூறியுள்ளார்.

### பட்டினத்தார் அறிவுரை :

முற்றத் துறந்த பற்றற்ற ஞானியாகிய பட்டினத்தடிகள், 'உலகவரே! வேதநெறி என்றும் சைவநெறி என்றும், மாறு பட்டுழல வேண்டாம்; இரண்டும் ஒன்றேயாம். உணர்மின்கள்' என்று அறிவுரை கூறியுள்ளார்.

## குமரகுருபரர் :

பதினேழாம் நூற்றுண்டில் பற்றுநீங்கித் துறந்து அருளரசு செலுத்திய குமரகுருபர சுவாமிகள், வேதாந்தத்தின் சாரமே சைவசித்தாந்தம் என்று விளக்கியுள்ளார்.

" ஓரும் வேதாந்தம் என்று உச்சியில் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரங்கொண்ட சைவசித்தாந்தம் "

என்று கூறி, இவைகளில் வேற்றுமையில்லை என்று விளக்கியுள்ளார்.

## சமயப் பொதுமை :

இவ்வாறு தேவார ஆசிரியர்களும் சித்தாந்தஆசிரியர்களும் திருமூலரும் சேக்கிழாரடிகளும் பட்டினத்துப்பெருந் துறவியும் குமரகுருபரரும் விளக்கிய சைவசமயப் பொதுமை நெறியைத் தான், அவர்கள் கூறிய மரபுநிலையில் நின்று தாயுமானவர் பாடி மகிழ்ந்துள்ளார்.

## அடிப்படை உண்மைகள் :

தாயுமானவர் சைவசமயம்கூறும் அடிப்படை உண்மைகள் அனைத்தையும் பல்வேறு இடங்களில் மிகவும் எளிமையாக விளக்கியுள்ளார். கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள் குறித்துத் தாயுமானவர் கருத்துமாறுபாடு உடையவர் அல்லர். இனி உயிர்களைப் பற்றிநிற்கும் ஆணவம், கன்மம், மாயை முதலிய முக்குற்றங்கள் பற்றிய கொள்கைகளிலும் அவர் மாறுபடவில்லை. இறைவனை அடைதற்குரிய வழிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு வழிகளையும் உடன்பட்டுப் பாடுகின்றுர்.

## பற்றிநிற்கும் பழவினைகள் :

வினைகள்பற்றிச் சைவசமயத்திற்கும் சமண பௌத்தசமயங் கட்கும் மாறுபாடான கருத்து உண்டு. சமண பௌத்த சமயங்கள் உயிர்களைப் பற்றிய வினைகளைப் போக்க முடியாது; அவைகளை உயிர் அனுபவித்தே ஆகவேண்டும் என்று கூறுகின்றன. ஆனல், சைவசமயம் உயிர் இறைவனை நினைந்து வழிபட்டால் வினைகளைநீக்கிக்கொள்ளமுடியும் அல்லது குறைத்துக் கொள்ளமுடியும் என்று கூறுகின்றது.

### கருஇருக்கும் கன்மம் இல்லை :

திருஞானசம்பந்தர், நாவினுல், நம்பன் நாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருமந்திரத்தை நவிற்றினுல், அவர்களின் பழைய துன்பங்கள் விலகும். பற்றிநின்ற பழவினைகள் பாறிக்கும் என்று கூறுவார்.

" நம்புவார் அவர் நாவின் நவிற்றினுல்
வம்பு நாண்மலர் வார்மது ஒப்பது
செம்பொனுர் திலகம் உலகுக் கெலாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே. "

இதே கருத்துடையவராகிய தாயுமானவர், தன்நெஞ்சிற்கு அறிவுரை கூறும்போது, 'நெஞ்சே ! மலையரசன் மகளாகிய உமையம்மையின் உருவை ஒருபாகத்தில் உடைய குருநாதனை, முக்கண் எம்கோவை நீ பணிந்து போற்றுவாய்; அவ்வாறு செய்தால், உன் கன்மங்கள் அழியும். அவைஅழிய, மீண்டும் கருவினுள் அடைபடும் நிலை உனக்கு ஏற்படாது என்பர். "மலைமகள் உருஇருக்கின்ற மேனி ஒருபரங்குருவை, முக்கண் எம்கோவைப் பணி நெஞ்சே! கரு இருக்கின்ற கன்மம் இங்கு இல்லையே" என்பது அவர் பாடல்தொடர். ' 'காகமானவை கோடி கூடிநின்ருலும் ஒரு கல்லின் எதிர்நிற்குமோ? ' இறைவன் அருள் கிடைத்து விட்டால் சூழ்ந்துள்ள வினைகள் மறைந்திடும் என்று கூறுகின்ருர்.

### முழுமுதல்வழிபாடு :

சைவசமய அருளாளர்கள் சிறுதெய்வ வழிபாட்டை ஏற்காதவர்கள், அப்பரடிகள், "சென்று நாம் சிறுதெய்வம் சேரோம் அல்லோம், சிவனடியே சிந்திக்கப்பெற்றேம் நாமே" என்று இக்கொள்கையை அரண்செய்வார். திருமூலர் "ஒன்று கண்டீர் உலகிற்கு ஒருதெய்வம்" என்று கூறுவார். இவர்களைப் போற்றுபவராகிய தாயுமானவர், சிவபெருமானையும், சிவமூர்த்தங்கள் இருபத்தைந்துள் அடங்கும் தென்முகக்கடவுள், உமையொருபாகன் போன்ற தெய்வக்கூறுகளை அல்லால் வேறு எந்தத் தெய்வத்தையும் பாடவில்லை.

### மூலன் மரபு :

நந்திமரபிலே வந்தவர் மூலர். அவர் "நந்தியருளாலே மூலனை நாடிப்பின், நந்தியருளாலே நாதனும் பேர்பெற்றேன்" என்பார். அந்த மூலர் மரபில் வந்த மௌனகுருவே தாயுமானவரின் ஞானுசிரியர். அவர் தமக்குச் சிவஞானசித்திநெறி உபதேசம் செய்ததாகப் பாடுகின்ருர்.

"எந்தைவடஆல் பரமகுருவாழ்க! வாழஅருளிய நந்திமரபு வாழ்க! என்று அடியர் மனம்மகிழ, வேதாகமத் துணிபு இரண்டில்லை ஒன்று என்னவே வந்தகுருவே! வீறுசிவஞான சித்திநெறி மௌனஉபதேச குருவே! மூலன்மரபில்வரு மௌன குருவே!"

இப்படித் தனக்கு அருளிய மௌனகுரு தன்னைத்தடுத்து ஆட்கொண்டதாகவும் கூறுகின்றார். "தரணிமிசை லோகாயதன் சமய நடை சாராமல் வேதாந்த சித்தாந்த சமரச சிவாநுபூதி மன்ன ஒருசொல் கொடுத்து எனைத்தடுத்து ஆண்டு அன்பின் வாழ்வித்த ஞானகுருவே" என்றபாடலில் வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி தனக்கு வழங்கியதாகக் கூறியுள்ளார்.

## மூவர் சொல்லும் தமிழ் :

தேவார மூவர் அருளிய திருப்பாடல்களைத் தெய்வமறையாகக் கொண்டவர் தாயுமானவர். தேவர்கள் தொடர்ந்து வணங்குவதால் சிவந்த திருவடிகளையுடைய சிவனே! மூன்று கண்களையுடையவனே! கரும்பனைய இனியவனே! மொழிக்கு மொழி இனிக்கும் தேவார ஆசிரியர்கள் அருட்பாடல்களைக் கேட்ட செவி, உன்னுடைய தோடுடையசெவி; அச்செவியில், அறிவற்ற யான் புலம்பும் சொற்கள் கேட்டிடுமோ? என்று அவர்கள் பெருமையையும் தன் சிறுமையையும் விளக்குகின்றார். "செந்தாள் முக்கண் செங்கரும்பே! மொழிக்குமொழி தித்திப்பாக மூவர் சொலும் தமிழ்கேட்கும் திருச்செவிக்கே மூடனேன் புலம்பிய சொல் முற்றுமோதான்" என்பது அவர் பாராட்டுரை.

## திருநீறு :

தாயுமரனவர் சைவ சாதனங்களில் ஒன்றுகிய திருநீற்றைப் பல்வேறு இடங்களில் சிறப்பித்துப் பாடுகின்றார். முக்கண் உடையாய்! குணங்குற்றங்களைக் கடந்தவனே! அடியவர்கள் நினைவில் பெருங்கருணை வெள்ளமாகப் பெருகும் அரசே! திருநீறு விளங்கும் செம்மேனியம்மானே! என்று பாடிப் பரவுகின்றார்.

"நீறுஆர்மேனி முக்கண்ணுடை நிமா! அடியார் நினைவினிடை
ஆறுய்ப்பெருகும் பெருங்கருணை அரசே! எனைஆள்வானே!".

## சிவபோகம் வேண்டுதல் :

தாயுமானவர் தனக்குத் திருவடிப்பேறு வேண்டுகின்றார். அத்திருவடியே உயிர் ஆனந்தநிலையில் நிலையாகத் தங்கும்

இடம் ஆகும் என்று புகழ்கின்றார். "அங்கணா! உன் அடியிணை அன்றியே தங்க வேறு இடம் உண்டோ? சகத்தினிலே" என்று கேட்கின்றார். ஐம்புலன்கள் என்னும் பட்டிமாடுகளும் எமன் என்னும் தீய பூண்டும் என்னை அணுகி வருத்தாமல், நீயே முன்னிருந்து சிவபோகம் என்னும் நற்பேற்றைத் தந்து என்னை ஆட்கொள்வாய் என்று இரந்து பாடுகின்றார்.

"புலப்பட்டியும் நமனை தீப்பூடும் அணுகாமல் முன்நின்று
நாடுசிவபோகமான பேற்றைப் பகுத்தருளி எனைஆள
வல்லையோ?"

சிவபோகமாவது: மனமாகிய வயலில் அருளாகிய நீரினைப் பாய்ச்சி, ஞானமாகிய பயிரை விளைத்து, ஐம்புலன்களாகிய மாடுகள் மேய்ந்திடாமல், எமனாகிய பூண்டு விளையாமல் பாது காத்துச் சிவபோகமாகிய நெல்லினைக் கொள்வதே ஆகும். இதனைப் "பாதகங்கள் செய்திடினும்" எனவரும் உண்மை நெறி விளக்கத்தால் அறியலாம்.

## சிவநெறிப் பற்று:

தாயுமானவர் தான் முற்றும் உணர்ந்த உண்மையாகக் கூறுவது, சிவனை அடைந்து வழிபட்டு நிற்பவர்தான் உய்கதி அடைவர் என்பதாகும். "தெய்வம் வேறு உளது என்பவர் சிந்தனை நைவர் என்பதும், நற்பர தற்பர சைவசிற்சிவனே! உன்னைச் சார்ந்தவர் உய்வர் என்பதும் யான் உணர்ந்தேன் உற்றே" என்ற பாடலில் தான்கண்ட முடிபை உலகவர்க்கு உணர்த்துகின்றார். உள்ளம் தெளிந்து சிவமாம்பேறு அடைந்த அனைவருக்கும் தான் கொத்தடிமையாக இருக்க ஆசைப்படு கின்றார். "சித்தம் தெளிந்து சிவமானார் எல்லார்க்கும் 'கொத்தடிமை' ஆன குடி நான் பராபரமே!" எனும் பாடலில் தாயுமானவரின் சிவநெறிப்பற்று வெளிப்படுகின்றது.

## வருக! வருகவே!

'சைவசமயமே உலகசமயங்களில் உயர்ந்தது. ஏனெனில்? சமயங்களில் அது அதீதசமயம் ஆகும். அச்சமயம் பழம்பொரு ளாகிய சிவத்தைத் தில்லைப் பொன்மன்றத்தில் வெளிக்காட்டும். இக்கருத்தைவிட்டுப் பொய்மலிந்து உழலும் பிறசமயங்களை ஏற்கவேண்டாம். முத்தியின்பத்தைத்தரும் தெய்வசபையைக் காண உலகீர்! வருகவே; சிவபோகம் என்னும் பேரின்ப வெள்ளத்து மூழ்க, எடுத்த இந்தத் தேகம் விழுமுன் வணங்க வருகவே' என்று அழைக்கின்றார் தாயுமானவர்.

# சீரகம் (Cumin Seeds)

**தஞ்சை. திரு. நா. தனுக்கோடி,**

மருத்துவ அலுவலர், திருநெய்ப்பேர்.

சீரகம் எனப் பெயர்கொண்ட வித்துவகைகள் நற்சீரகம், காட்டுச்சீரகம், கருஞ்சீரகம், பெருஞ்சீரகம் எனப் பலவகை உண்டு. மருத்துவத்தில் கடைசரக்குகள் பல இருப்பினும், சீரகம் ஒன்றுக்குத்தான் 'நல்' என்ற அடைமொழி தரப்பட்டுள்ளது· இதனால் பித்தசாந்தி, அரோசகம், வயிற்றுவலி, முகரோகம்' பிலீசநோய், சுவாசகாசம், சுரக்கினம், சீதரத்தக்கிராணி, வாதாதிக்கம், பீநசம், பயித்தியம் ஆகிய இவை விலகும். சரீரத்திற்கு உறுதியும் கண்ணுக்குக் குளிர்ச்சியும் உண்டாகும்.

நற்சீரகம், அசோகாரிஷ்டம், அசோககிருதம், அக்னிதுண்டி வடி, அஸ்வகந்தாதி லேகியம், பாஸ்கர லவண சூர்ணம்' வில்வாதி லேகியம், பிருங்காமலக தைலம், பிருங்கராஜ தைலம்' சித்ரகாதிவடி, தாடிமாஷ்டக சூர்ணம், இங்வாஷ்டசூர்ணம், ஜாதி பலாதிசூர்ணம், கபித்தாஷ்டக சூர்ணம், கூஷ்மாண்டலேகியம்' பஞ்சதிக்த குக்குலு கிருதம், இரசோத்தமாதிலேபம், யோகராஜ குக்குலு, பஞ்சதீபாக்கினி சூர்ணம், சீரக தைலம் முதலிய பல ஆயுர்வேத சித்த மருந்துகளில் இடம்பெறுகிறது.

தஞ்சை மன்னர் சரபேந்திர வைத்ய முறைகளில் பித்தரோக சிகிச்சையில் நற்சீரகம் பெரிதும் கையாளப்படுகிறது. பித்தம், வாய்கசப்பு, வயிற்றெரிவு, மயக்கம் முதலியவைகட்குச் சீரகம் தூசி தும்பு இல்லாமல் சுத்தம்செய்து மண் அல்லது பீங்கான் பாத்திரத்தில் போட்டு அது மூழ்கும்படி எலுமிச்சம்பழச்சாறு விட்டு ஊறவைத்து, நிழலில் உலர்த்திவைத்து, சூரிய உதயத்திற்கு முன்பு சிறிது வாயில்போட்டுக்கொண்டு மறுபடியும் நித்திரைகொள்ளவும். பித்ததோஷங்களெல்லாம் தீரும். மிகக் கைகண்டது. இத்துடன் சர்க்கரையை சேர்த்துக் காலையில் உட்கொண்டால் பயித்தியம்தீரும் என்று சொல்லப்பட்டுள்ளது.

சுத்திசெய்த சீரகம் மூழ்கும்படிக் கையாந்தகரை சாறுவிட்டு ஊற வைக்கவும். மூன்று முறை சாறு காயக்காயப் புதுச்சாறு

விட்டு ஊறவைத்துக் காயவைக்கவும், விடியற்காலையில் தின்று வரப் பித்தம் சமனமாகும்; கைகண்டது என்றும் கூறப்பட்டுள்ளது.

சீரகத்தைத் தூள்செய்து மண்பாண்டத்தில் நாலில் ஒரு பங்காய் கஷாயம் வடித்து வடிகட்டிச் சூட்டுடன் எலுமிச்சம் பழச்சாறு சிறிதுசேர்த்து, ஏலக்காய் பொடித்துப்போட்டு, தேன் அல்லது சர்க்கரை கலந்து இளஞ்சூட்டில் பருகிட மயக்கம், வாய்கசப்பு, பித்த எரிவு இவைகள் சமனப்படும்.

சரபேந்திர வைத்திய முறையில் இரத்த பித்தத்திற்கு, செருப்படிச்சாற்றில் சீரகம் பொடிசெய்துபோட்டுக்கொடுக்க வியாதி தீரும் என்றும், சீரகத்தை அறைத்துக் குழப்பிக் காய்ச்சி வடித்த நெய்யால் பெரும்பாடுகுணமாகும் என்றும் ஸஹஸ்ரயோகத்தில் கூறப்பட்டுள்ளது.

"மங்காத சீரகத்தைத் தந்தீரேல், தேடேன் பெருங்காயம்; ஏரகத்துச் செட்டியாரே!" எனக் கவி காளமேகப் புலவர் பாடியதாகச் செவிவழிச் செய்தி கூறுகிறது. திருவருளால் நற்குணங்கள் பெற்ற நற்சீரகத்தை மருத்துவத்திலும், உணவிலும் உபயோகித்து நலம்பெறுவோமாக.

---

## பார்வையாளர் குறிப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

**ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜசுவாமி தேவஸ்தானம்**

சேலம் செவ்வாய்ப்பேட்டை மாதர்சங்கம் அன்பர்கள் 59 பேர் ஞானசம்பந்தப்பெருமான், திருமணம் நடந்த அன்றே சிவபெருமான் திருவருளால் தம்மைச்சேர்ந்த எல்லா அன்பர்களையும் சிவஜோதியில் கலக்கச்செய்து தாமும் சிவஜோதியில் கலந்தருளிய இத்திருக்கோயிலுக்கு வந்தபோது திருக்கோயில் நிர்வாகி அவர்கள் அன்போடு வரவேற்று உடனிருந்து வழிபாடு செய்வித்தார்கள். அர்ச்சகர்களும் மிகச்சிறப்பாக வழிபாடுசெய்வித்தார்கள் திருக்கோயில் மிகவும் தூய்மையாக வைக்கப்பட்டுள்ளது. வழிபட்ட நாங்கள் உள்ளும் புறமும் மகிழ்ச்சியோடு இனிமையாக வழிபடமுடிந்தது. தருமை ஆதீனத்தின் திருப்பெயர் சிறக்க, கோயில் நிர்வாகம் நடைபெறுவது கண்டு பெரிதும் மகிழ்ந்தோம்,

(ஒ-ம்) **T. கண்ணம்மாள்,**
செயலாளர்.

# " நலம் தரும் சொல் "

திரு. K. M. ஜெயராமகிருஷ்ணன்

கிருதயுகம் என்று சொல்லப்படும் சத்திய யுகத்தில் தியானத்தாலும், திரேதாயுகத்தில் வேள்விகள் செய்தும், துவா பரயுகத்தில் பகவானுக்குச் சேவைசெய்தும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பெருமானை ஆன்றோர்கள் வழிபட்டு அவன் அருளைப் பெற்றனர். ஆனால் கலியுகத்திலோ இறைவன் திருநாமம் செப்பினாலே போதும்; நற்கதி பெறலாம் என்கிறது விஷ்ணுபுராணம். இதனையே வேதங்களும் கூறுகின்றன.

ஸத்யே யத் த்யாயதே விஷ்ணும்
த்ரேதாயாம் யஜதே மனக : l
த்வாபரே பரிசர் யாயாம்
கலௌ தத் ஹரி கீர்த்தநாத் ll

எந்த நேரமும் இறைவன் திருநாமம் ஒன்றையே உச்சரித்து முடிவில் இறைவனை நேரில் காணும்பேறு பெற்றார் ஸ்ரீ தியாகப்பிரும்மம். அதுபோல, பொன்னுடல் பெற்ற பொல்லா அரக்கன் மைந்தனாய்ப் பிறந்தும் புவிக்கு நாயகன் ஒருவனே என உணர்ந்து, " அஷ்டாக்ஷரம் " எனப்படும் பகவத்தியான மகிமையினால் அரக்கனின் கொடுமைகளுக்கு அஞ்சாது இறுதியில் இறைவன் அருள்பெற்று உய்ந்தான் பிரகலாதன். நாமஸ்மரணைபற்றி ஆன்றோர்கள் கூறும்போது, " சொல்லச்சொல்ல இதன் ருசி அதிகமாகுமேதவிர, தெவிட்டுவ தில்லை " என்கின்றனர்.

தென்னாடு பெற்ற தவப் புதல்வி – அழகனுக்குத் தான் அணிந்த மாலையினை அணிவித்து அழகுபார்த்த அன்னை – சூடிக் கொடுத்த சுடர்க்கொடி கூறுவார்,

" தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்
தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க "

என்று. நலம் பல பெறலாம்; ஆகவே நீங்களும் மாய உறக்கம் களைந்து மாதவனைப்பாடி, பாவைநோன்பு நோற்க வாருங்கள்

எனத் தன் தோழியரை எழுப்புவதுபோல் அஞ்ஞான இருள் கவிந்து அனவரதமும் உலகமாயையில் உறங்கிக் கிடக்கும் மக்களை விழிப்புக்கொள்ளச்செய்கிருர்.

திருமலை உறை திருமார்பன் திருவருள்பெற்ற ஆன்ருேர்கள் பன்னிருவரும் பரமன்புகழ் ஒன்றைப் பாடுவதையே பெரும் பேருக எண்ணினர்.

" ஒயும் முப்புப் பிறப்பு இறப்பு; பிணி
வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து,
ஆயன் நாள் மலர் ஆம் அடித்தாமரை
வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்க்கே "

என்பார் நம்மாழ்வார்.

திருவேங்கடத்தில் நிற்கும் கோபாலனுடைய திருவடித் தாமரையை வாயால் துதித்து மனத்துள் மறவாமல் வைத்தவர்களுடைய நோய்கள் எல்லாம் நீங்கும் என்பதே இதன் பொருள். இதனைத்தான் வள்ளுவரும்,

" சொல்லுக சொல்லின் பயனுடைய "

என்பார். பிறப்பும் இறப்பும் நீங்கிப் பேரின்பவாழ்வு பெற, இறைவன் திருநாமம் துணைசெய்வதைக் கம்பரும் " சென்மமும் மரணமும் இன்றித் தீருமே இறைவன் திருநாமத்தின் இரண்டெழுத்திஞல் " என்கின்ருர்.

இறைவன் திருவருள்பெற்ற நிலையில் ஆழ்வார்கள் பாடிய பாடல்களில் சிலவற்றைக் காண்போம்.

" பாடல் பத்திவை பாடுமின் தொண்டீர்
பாட நும்மிடை பாவம் நில்லாவே. "

பரமன் திருநாமம் பயின்ருல் பாவம் நில்லாது என்கிறது பெரியதிருமொழி.

திருநாமம் ஒன்றைமட்டுமே கூறினல் போதும் வேறு ஒன்றும் தனக்குத் தேவையில்லை என்கிருர் திருமழிசையாழ்வார். இதனையே நம்மாழ்வாரும்,

" பாடீர் அவன்நாமம் வீடே பெறலாமே "

என்கிருர். இவ்வாறு நலம் பல நல்கும் – நலந்தரும் சொல்லி ஊைத் திருமங்கைஆழ்வார் கூறும்போது, “குலந்தரும் செல்வந் தந்திடுமடியார் படுதுயராயின வெல்லாம் வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற தாயினும் ஆயின செய்யும் நலந்தரும் சொல்லே நான் கண்டுகொண்டேன் நாராயணு என்னும் நாமம்” என்பார்கள்.

இவ்வாறு நம் துயர்களைந்து செல்வம் அருளி, நற்பெறும் பேற்றினே நல்கி இம்மைக்கும் மறுமைக்கும் வாழ்வளிக்கும் நலந்தரும் சொல்லாம் “நாராயணு” என்னும் நாமத்தினே நாமும் கூறி நலம் பெறுவோம்! வாரீர் !!

ஓம் நமோ நாராயணுய.

நாம ஸங்கீர்த்தனம் யஸ்ய ஸர்வ பாப ப்ரணுசனம் I
ப்ரணுமோ துஃக சமன – ஸ்தம் நமாமி ஹரிம்பரம் II



---

## சிவபோகசாரம்

என்னே அறிவென்ருன் என்அறிவில் ஆனந்தம்
தன்னேச் சிவமென்ருன் சந்ததமும் — என்னேஉன்னேப்
பாரா மறைத்ததுவே பாசமென்ருன் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்.

ஏதேது செய்தாலு் ஏதேது சொன்னுலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் — மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே.

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மானல் — அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென்? நெஞ்சமே
எல்லாம் சிவன்செயலென் றெண்.

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாள் ஆலயவழிபாடு 13—4—81 தமிழ்ப்புத்தாண்டுத் தொடக்கநன்னாளன்று காலை திருநாகைக் காரோணத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ நீலாய தாட்சி உடனாகிய ஸ்ரீ காயாரோகணப்பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. திருக்கோயில் அறங் காவலர் அனைவரையும் வரவேற்றார். தலப்பதிகங்கள் பாரா யணம் செய்யப்பெற்றன. ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர் ஸ்ரீ நெல்லையப்பசுவாமிகளும், வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ. அவர்களும் சமயச்சிந்தனை வழங்கினர். அச் சிடப்பெற்ற தலத்திருப்பதிக நூல் வந்திருந்த அன்பர்கட்கு வழங்கப்பெற்றது. நாகை அன்பர் திரு. எம். சௌந்தரராஜப் பிள்ளை அவர்கள் மாகேசுவரபூஜை நிகழ்த்தினார். வழிபாட்டில் அன்பர் பலர் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

## ஸ்ரீ உமாபதிதேவ நாயனார் குருபூஜை விழா

சந்தான குரவருள் நான்காமவராகிய ஸ்ரீ உமாபதி தேவ நாயனார் குருபூஜை விழா 17—4—81 வெள்ளிக்கிழமையன்று நிகழ்வுற்றது. தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் கோயிலில் எழுந்தருளியுள்ள சமயாசாரியர், சந்தானாசாரியர்களுக்குக் காலை ஒன்பது மணியளவில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்ந்தன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினார்கள். தருமையாதீனத்தின் சார்பில் சிதம்பரம் கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதி தேவநாயனார் திருமடத்தில் பகலில் அபிஷேக ஆராதனைகளும், மாலை 6 மணியளவில் தில்லைத்திருக் கோயிலில் ஸ்ரீ நடராஜப்பெருமானுக்குச் சகஸ்ரநாமார்ச்சனையும் நடைபெற்றன. தருமபுரம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் மாலை 7 மணியளவில் வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ. "சிவப்பிரகாசம்" என்னும் பொருளிலும், வித்துவான். திரு. கா. ம. கண்ணப்பன், பி. லிட்., "திருவருட் பயன்" என்னும் பொருளிலும் சொற்பொழிவாற்றினர். அன்பர் பலர் கலந்துகொண்டு பயனுற்றனர்.

## சித்திரைப்பெருவிழா

### சீகாழியில் :

தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில் 10—4—81 முதல் சித்திரைத்திருவிழா தொடங்கிநடைபெற்றது. 11—4—81 அன்று இரண்டாம் நாள் திருமுலைப்பால் விழா. அன்று காலை தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தரிசனத்திற்கு எழுந்தருளி யிருந்தார்கள். ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் சிவிகையில் எழுந்தருளியானவுடன் அற்புத விளக்கச் சொற்பொழிவுகள் தொடங்கி நடைபெற்றன. பிரமதீர்த்தக் கரைக்குப் பெருமான் எழுந்தருளியானதும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தருமையாதீன ஓதுவாமூர்த்தி, திரு. எஸ். திருநாவுக்கரசு தேசிகர் அவர்களுக்குத் "திருமுறைக் கலாநிதி" என்ற பட்டம் வழங்கிப் பொன்னடை போர்த்திப் பணமுடிப்பும் வழங்கி ஆசியருளி னார்கள்.

திருவிழா நாட்களில் மாலையில் கருத்தரங்கம், பட்டிமன்றம், கவியரங்கம், வழக்காடு மன்றம், திருமுறை வகுப்பு ஆண்டு விழா, இன்னிசை அரங்கம், பொம்மலாட்டம் முதலிய நிகழ்ச்சி கள் நடைபெற்றன. அன்பர்கள் கலந்துகொண்டு சுவாமி தரிசனம்செய்தும் நிகழ்ச்சிகளைக்கேட்டும்கண்டும்பயனுற்றனர்.

### திருக்கடவூரில் :

தருமையாதீனத்திற்குச்சொந்தமான திருக்கடவூர் ஸ்ரீஅமிர்த கடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் சித்திரைப் பெருவிழா 10—4—81 முதல் தொடங்கி நடைபெற்றது. 15—4—81 கால சம்காரத் திருநாளன்று தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கினார்கள். உற்சவ நாட்களில் சொற்பொழிவு களும் இன்னிசை விரிவுரையும் நிகழ்வுற்றன. 14—4—81 அன்று திருமுறைவிழாவும் தேவாரவகுப்பு ஆண்டுவிழாவும் நிகழ்ந்தன.

### திருப்பனந்தாளில் :

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் 10—4—81 முதல் சித்திரைப் பெருவிழா மிகச்சிறப்பான முறையில் நடை பெற்றது. உற்சவநாட்களில் சமயச் சொற்பொழிவுகளும் இன் னிசையரங்கும் பொம்மலாட்டமும் நிகழ்ந்தன. பெருமக்கள்

பலர் சுவாமி தரிசனம் செய்தும் சொற்பொழிவுகளைக் கேட்டும் பயனுற்றனர்.

### திருவையாற்றில் :

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருவையாறு ஸ்ரீ ஐயாறப்பர் திருக்கோயிலில் சித்திரைப் பெருவிழா 10—4—81 தொடங்கிச்சிறப்பாக நடைபெற்றது. உற்சவநாட்களில் சமயச்சொற்பொழிவுகளும் இன்னிசையரங்கும் நிகழ்வுற்றன. அன்பர்கள் சுவாமி தரிசனம் செய்தும் நிகழ்ச்சிகளைக் கேட்டும் பயனுற்றனர்.

## ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை விழா

### தருமபுரத்தில் :

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் சதயநாள் குருபூஜை விழா 29—4—81 அன்று மிகச்சிறப்பாக நடைபெற்றது. காலை 8 மணியளவில் சமயாசாரியர், சந்தானசாரியர்களுக்கு விசேஷ அபிஷேகஆராதனைகள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். இரவு ஆதீன ஓதுவாமூர்த்திகளின் பண்ணிசைப் பாராயணத்துடன் திருவீதியுலா நடைபெற்றது. திருவீதியுலாவின் போது வித்துவான் திரு. சொ. முத்தையன், எம். ஏ, வித்துவான் திரு. மு. ஆறுமுக தேசிகர் ஆகியோர் அற்புத விளக்கச் சொற்பொழிவுகள் ஆற்றினர்.

### திருவாமூரில் :

ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் அவதரித்த திருத்தலமாகிய திருவாமூரில் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் 27, 28, 29—4—81 ஆகிய மூன்றுநாட்களிலும் சிதம்பரம் கனகசபைநகர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாக்குழுவினரால் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்விழா மூன்றுநாட்களிலும் திருமுறை இசையரங்கம், கருத்தரங்கம், பண்ணாராய்ச்சி, வழக்காடு மன்றம், ஆகிய நிகழ்ச்சிகள் சிறப்பாக அமைந்திருந்தன. 29—4—81 சதயத் திருநாளன்று தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். விசேஷ அபிஷேக ஆராதனைகட்குப்பின்னர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கும்பகோணம் இசைநம்பி. எஸ். எஸ். கல்யாணசுந்தர தேசிகர்

அவர்களுக்குத் "திருமுறைக் கலாநிதி" என்னும் பட்டம் வழங்கிப் பொற்கிழி அளித்து ஆசி அருளி வழிபாட்டிற்கு வந் திருந்த அன்பர்கட்கு அருட்பிரசாதம் வழங்கினர்கள். அன்று இரவு 10 மணியளவில் அருள்மிகு அப்பர் பெருமான் திருவீதி யுலாக் காட்சி திருமுறைப் பாராயணத்துடன் நிகழ்வுற்றது.

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணி மன்றம்

### (கிளை) திருநெல்வேலி

மகாசிவராத்திரி வழிபாடு :— இம்மன்றத்தினரும், திருவுரு மாமலை திருப்புகழ்ச் சபையினரும், நெல்லை திருவள்ளுவர் கழகத்தினரும், மங்கையர்க்கரசியார் மாதர் கழகத்தினருமாகச் சுமார் அறுபதுபேர் அடங்கிய, குழுவினர் 4—3—81 சிவராத்திரி அன்று காலை மணி 6--30 க்குப் புறப்பட்டுத் திருக்குற்றலம், சிவசைலம், கரிசூழ்ந்தமங்கலம், கருவேலங்குளம், திருச்செந்தூர் ஆகிய தலங்கட்கு யாத்திரை செய்து ஆலயவழிபாடு நிகழ்த் தினர். மின்வாரியப் பொறியர் திரு. K. சுப்பிரமணியம் அவர்கள் மன்றத்தின் சார்பில் ஒவ்வொரு ஆலயத்திலும் தமிழருச்சனை செய்வித்தார். இரவு சுமார் 2—30 க்கு மீளவும் குழுவினர் நெல்லை யினை அடைந்தனர். திருத்தல யாத்திரையில் திரு. நல்லசிவன் செட்டியார், திரு. அ. கல்யாணசுந்தரம், திரு. R. M. வேலாயுதம், திரு G. பொன்னம்பலம், திரு. மா. ச. சயிலப்பன், திரு. R. சங்கர லிங்கம், திரு. K. S. பெரியசாமிப்பிள்ளை, திரு. இராமசாமிப்பிள்ளை ஆகியோர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர். தலைவர் திரு L. S. மார்த்தாண்டம் அவர்கள் மேற்பார்வையில் திருத்தல யாத்திரையில் அனைத்து ஏற்பாடுகளையும், மன்றச்செயலர் திரு. சைலப்பன் அவர்களும், உறுப்பினர் திரு. மயிலப்பன் அவர்களும் சிறப்புறச் செய்தனர்.

### (கிளை) திருத்துரையூர்

சித்திரைப்பூர வழிபாடு :— இக்கிளைமன்றத்தின் சார்பில் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார் குருபூஜைத் திருநட்சத்திரமாகிய பூரநட்சத்திரத்தன்று (17—4—81) திருத்துறையூர் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார் திருக்கோயிலில் திருவதிகை வித்துவான் திரு. ந. சண்முகசுந்தர தேசிகர் அவர்கள் சிவஞானபோதம் ஆரும் சூத்திரக் கருத்தினை விளக்கிச் சொற்பொழிவு ஆற்றினர்கள். விசேஷ அபிஷேக ஆராதனைகளும் நடைபெற்றன.

---




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

( துன்மதிஹூ வைகாசிமீ 1உ முதல் 32உ முடிய

(14—5—81 முதல் 13—6—81 முடிய)

### ஜெகத் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | செ | சூ பு. சு | |
| | இராசி | | ரா |
| கே | | | |
| | | | ல/ சந். கு சனி |

| | | | |
|---|---|---|---|
| சு. சனி சந். கு | கே | ல/ | பு |
| | அம்ஸம் | | |
| சூ | | | |
| | | ரா செ | |

ஸ்ரீ துன்மதிஹூ வைகாசிமீ 1உ குருவாரம் வியாழக்கிழமை உத்திர நக்ஷத்திரம் பத்திரை கரணம்கூடியகாலத்தில்சூரியஉதயம் முதல் 23 நாழிகை 33 விநாடிக்கு கன்னியாலக்னத்தில் ஸ்ரீ லோக ராட்சகரான சூரியபகவான் மேஷராசியிலிருந்து ரிஷபராசி சங்கிரமணமாக வைகாசி மாதப்பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று விஷ்ணுபதி புண்ணிய காலமாகும். சங்கிரமண கால கிரகஸ்திதியின் பலனாவது லோகநாடுகளில் பெரியநாடுகள் சில நாடுகளை ஆக்கிரமித்துக் கொள்ளும் ஆசையினால் ஒருநாட்டுக்கு ஒருநாடு குற்றம் சுமத்திப் போரிட முனைவர். ஆன்றோர்களின் தர்மநியமங்களினால் அச்செயல் மீறல் இன்றி நிற்கும். உலகில் 18, 19 பாகை வடஅட்சப் பகுதியில் மக்களுக்குக் கஷ்டமும்

பஞ்சமும் ஏற்படும். மற்றப் பிரதேசங்களில் கோடைமழை பெய்து வறட்சிதணியும். சர்வேஸ்வரன்கிருபையால்தேசங்களில் தர்மநீதிபரிபாலனம் நடந்து வரும். தேசங்களில் ஜனதிபதிகள் மந்திரிகள் பிரஜைகளின்நலம் காத்துவருவர். தேசநலத்திட்டங் கள் மூலம் பிரஜைகளுக்கு ஜீவனோபாய வாய்ப்பு ஏற்படும். அரசாங்கம் பிரஜைகள் முன்னேறச் சிறு தொழில்களுக்குப் பொருள் உதவி செய்தும் உணவுப்பயிர் உற்பத்திப் பெருக்கத் திற்கு விவசாயிகளுக்கான கருத்தரங்குகள் பல நடத்தியும் ஊக்கப்படுத்தி வரும். வறட்சிப் பிரதேசங்களில் ஆழ்கிணறு தோண்டுதல் குழாய்க்கிணறுஏற்படுத்துதல்போன்றநற்பணிகள் காருண்ய சீலர்களின் தீவிர முயற்சியில் நடைபெற்றுக் கொண் டிருக்கும். பிரஜைகள் ஊக்கத்துடன் தொழில் துறையில் உற்பத்தி பெருக்கிப் பயன் அடைந்து வாழ்வார்கள்.

உலகில் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் சிவ ராஜயோகத்தில் அவதாரமாக வந்து நித்தியம் சிவபெருமானைப் பூசிக்கின்ற சிவஞானகுருமகான்கள் லோகமாந்தர்களுக்கு உயர் வழிகாட்டியருள்வார்கள். இத்துன்மதி ஆண்டில் மானிடர்களின் மாறுதல்சிந்தனை நீங்கி,தெளிவுறஇறைவனைப் பிரார்த்தனைசெய்து வருவதே சிறந்தவழி எனத் திருவாய்மலர்ந்து பிரஸ்தாபித்தருளி, எல்லோரும் சிவசமய பண்பாடு ஆஸ்திகம் இவ்வழியில் மேன்மையுற அடிப்படை அமைப்புக்கு வித்திட்டு தழைத் தோங்க அனுக்கிரகம் செய்தருள்வார்கள். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகாலபூசைகள் காலம் தவறுமல் நடைபெறும். லோகமெங்கும் சிவசமயம் பரவும். மக்கள் அனைவரும் பண்பாட்டில் உயர்ந்து வாழ்வார்கள்.

1. மேஷம் :- அசுவதி – பரணி – கார்த்திகை ¼

( சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானங்கள் வந்துகொண்டி ருக்கும். பூஷணங்களின் பிராப்தியையளிக்கும். வித்துவத்து வத்தில் சிறப்புதரும். அரசாங்கத்தில்கௌரவித்தல் நன்மைகள் பல ஏற்படுதல் ஆகும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மேமீ 14, 15, 16, 17, 18, 24, 25, 26, 27, 30, 31 ஜூன்மீ 1, 4, 5, 10, 11, 12, 13, 14 தேதிகளில் தனதாயம், நல்லவர் சந்திப்பு, ஞானஉரையாடல் ஆகிய நற்பலன்ஏற்படும். மேமீ 19, 20 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி - மிருகசீர்ஷம் ½

( இ. ஊ. ஏ. – ஒ. வ, வி. வூ – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமான்னம் வந்துகொண்டிருக்கும். முயற்சிக்கின்ற காரியங்கள் நல்லவிதமாக நடக்கும். வித்து வத்துவத்தில் மேமீ 24உமுதல் பிரக்கியாதி ஏற்படுதல் வெகுமதி வருதல் ஆகும். வீடு வாகனப்பிராப்தியில் நல்லன ஏற்படும். புத்திரர்களின் கல்விகலைகளில் தொழில்துறையில் முன்னேற்றம் ஏற்படும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம் நிலவும். மேமீ 16, 17, 18, 19, 20, 28, 29 ஜூன் 1, 2, 3, 6, 7, 13, 14 தேதிகளில் தனு தாயாதி நற்பலன்களையளிக்கும். மேமீ 21, 22, 23 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾

( கா. கி. - கு. க. ங. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வரும். மாதப் பின்பகுதி யில் அதிகமாகச் செலவை ஏற்படுத்தும். சகோதரருக்குச் சுபம் ஏற்படும். வீடுவாகன பிராப்தியில் முதலீடுகள் ஆகும். புத்திரர் களுக்கு முன்னேற்றம் தரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். மேமீ 19, 20, 21, 22, 23, 28, 29, 30, 31 ஜூன்மீ 1, 4, 5, 8, 9 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களைத்தரும் மேமீ 24, 25 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.

( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. – டி. டு. டோ. )

கடகராசி 9 பாதங்களும் சுபமான பலனைத் தரும். பண வரவுகள் நல்லவிதத்தில் வரவாகிக்கொண்டிருக்கும். நல்ல பூஷணங்களைத்தரும். வித்துவத்துவத்தில் பிரசித்தம் ஏற்படும். வாகனசௌகரியம் மேலாக இருந்துவரும். குலதெய்வத்திற்குப் பூசைபோடுதல் இல்லத்தில் சுப விசேஷம் நடைபெறுதல் ஆகும். புத்திரபாக்கியம் ஒன்று ஏற்படும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாக நடந்துகொண்டிருக்கும். மேமீ 14, 15, 21, 22, 23, 24, 25, 30, 31 ஜூன்மீ 1, 2, 3, 6, 7, 10, 11, 12 தேதிகளில் பண ஆதாயம் காரியசித்தி ஆகிய நற்பலனை ஏற்படுத்தும். மேமீ 26, 27 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகள் மத்திமபலன்தரும்.

5. சிம்மம் ,- மகம் – பூரம் – உத்திரம் $\frac{1}{4}$

( ம. மி. மு. மே. – மோ. ட. டி. டு. – டே.

சிம்மராசி 9 பாதங்களும் சுபபலன்தரும். பணவருமானம் வந்துகொண்டிருக்கும். போஜனதி செளகரியங்கள் திருப்தி கரமாக இருந்துவரும். வித்துவத்துவம் கலைத்துறையில் தொழில் துறைகளில் முன்னேற்றம் ஏற்படும். சகோதரர்கள் விசுவாசத் துடன் இருந்துவருவர். இயந்திர சாதனத்தில் ஆதாயம் தரும். தார புத்திரர்களின் செளக்கியம் நன்ருக இருந்துவரும் மேமீ 16, 17, 18, 24, 25, 26, 27 ஜூன்மீ 2, 3. 4, 5, 8, 9, 13, 14 தேதி களில் விசேஷமான பலனைத்தரும். மேமீ 28, 29 தேதிகள் சந்தி ராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ – ஹஸ்தம் – சித்திரை $\frac{1}{2}$

( டோ. ப. பி. – பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். பண வருமானம் தக்கவழியில்வந்துகொண்டிருக்கும். சகோதரருக்குச் செளக்கிய பலனை அளிக்கும். வாகனம் வீடு வசதிகளுக்கு ஓரளவு பொருள்முடங்கும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் மாதப்பின்பகுதியில் நற்பலன்வரும். புத்திரர்களுக்கு மேன்மை ஸ்திதியை உண்டுபண்ணும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம் நிலவும். மேமீ 14, 15, 19, 20, 26, 27, 28, 29 ஜூன்மீ 4, 5, 6, 7, 10, 11, 12 தேதிகளில் மிகுந்த நற்பலன்தரும். மேமீ 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி - விசாகம் $\frac{3}{4}$

( ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். கௌரவ ஸ்திதியிலேயே பணவருமானம் வந்துகொண்டிருக்கும். சகோ தரர்கள் நலனில் ஓரளவு பொருட்செலவும் ஆகும். வெளியூர் பயணம் சென்றுவருதல் ஆகும். போக்குவரத்தில் சிறு விபத்து சம்பவிக்கும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும், மேமீ 16, 17, 18, 21, 22, 23, 28, 29, 30, 31 ஜூன்மீ 6, 7, 8, 9, 13. 14 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களைத்தரும். ஜூன்மீ 1, 2, 3 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ – அனுஷம் – கேட்டை.

( தோ. - ந. நி. நு. நே. – ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். பண வருமானம் வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு முன்னேற்றம்

ஏற்படும். இல்லத்தில் சுபவிசேஷம் நடக்கும். வீடு வாகன பிராப்தியில் ஜுன்மீ முதல் பிரத்தியேகநிலைமையை உண்டு பண்ணும். மாதமத்தியில் எழுத்துமூல விஷயத்தில் பத்திரம் ஒப்பந்தம் இவற்றில் நல்லனஏற்படும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். மேமீ 14, 15, 19, 20, 24, 25, 30, 31 ஜுன்மீ 1, 2, 3, 8, 9, 10, 11, 12 தேதிகளில் தனுதாயாதிநற்பலன் களைத் தரும். ஜுன்மீ 4, 5 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதி களில் மத்திமபலன்தரும்.

9. தனுசு :– மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$
( யே. யோ. பா. பி. – பு. த. ப, ட. – பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் சுபபலன்தரும். குடும்பாபிவிருத் தியில் கௌரவத்திற்கு ஏற்ற பணவருமானம் வந்துகொண்டி ருக்கும். சகோதரருக்குச் சுபம்தரும். அரசாங்கநன்மை ஏற்படும் வித்துவத்துவம் கலைத் துறைகளில் வெகுமதி பலவரும். புத்திர பிராப்தி ஒன்று ஏற்படும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம்நிலவும். மேமீ 14, 15, 16, 17, 18, 26, 27, ஜுன்மீ 2, 3, 4, 5, 10, 11, 12, 13, 14 தேதிகளில் தனுதாயம் காரியஜெயம் ஏற்படும். ஜுன்மீ 6, 7 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

10. மகரம் :– உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$
( போ. ஜ. ஜி. – கி. கு. கே. கோ. – கா. கி. )

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு மேன்மை ஸ்திதி ஏற்படும். இயந்திரவாகனம் சீர்படும். வயிற்றில் உபாதை அல்லது அஜீர்ணம் ஏற்பட்டுக் குணமாகும் ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனைசெய்ய நலம்தரும். மாதமத்தியில் எழுத்துமூலத்தில் ஓர் நன்மை ஏற்படும். தாரபுத்தி ரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜுன்மீ 8, 9 தேதிகள் சந்திராஷ்டமம். மேமீ 16, 17, 18, 19, 20, 24, 25, 28, 29 ஜுன் மீ 4, 5, 6, 7, 13, 14 தேதிகளில் நற்பலன் தரும். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

11. கும்பம் :– அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் – பூரட்டாதி $\frac{3}{4}$
( கு. கே, – கோ. ஷ. ஸி. ஸு. – ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானம்வரும். ஞான விஷயங்களில் மனம்செல்லும். திடசித்தமானகாரியங்கள் நடைபெற்றுக்கொண்

டிருக்கும். நல்லோர் பிரபலஸ்தர்களின் சந்திப்பு, புத்துணர் வூட்டும் நிகழ்ச்சிகள் ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றுக இருந்துவரும். மேமீ 19, 20, 21, 22, 23, 26, 27, 30, 31, ஜூன்மீ 5, 6, 7, 8, 9 தேதிகளில் மிகுந்த நற்பலன்களைத்தரும். மேமீ 14, 15, ஜூன்மீ 10, 11, 12 தேதிகள்சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

12. மீனம் :- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.
( தி. - து. ஸ. ச. த. - தே. தோ ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வந்துகொண்டிருக்கும். பொன் மணி பூஷணம்தரும். வாகனம் கட்டிடம் இவற்றின் பிராப்தியில் நல்லசௌகரியம்தரும். வித்துவத்துவம்கலைத்துறையில் நன்மதிப்பை ஏற்படுத்தும். தார சௌக்கியம் புத்திரர்களின் சௌக்கியம் நன்றுக இருந்துவரும். மேமீ 14, 15, 21, 22, 23, 24, 25, 28, 29 ஜூன்மீ 1, 2, 3, 10, 11 தேதிகளில் விசேஷமான பலனைத்தரும். மேமீ 16, 17, 18, ஜூன்மீ 13, 14 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

---

## சிவபோகசாரம்

எவ்வுயிருங் காக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ — வவ்விப்
பொருகுவதும் நெஞ்சே புழுங்குவதும் வேண்டாம்
வருகுவதும் தானே வரும்.

ஐந்தறிவாற் கண்டாலும் ஆர்ஏது சொன்னாலும்
எந்த விருப்புவெறுப் பேய்ந்தாலும் — சிந்தையே
பார விசாரத்தைப் பண்ணுதே ஏதொன்றும்
தீர விசாரித்துச் செய்.

தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம் — நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும்.

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்.

# வைகாசி மாதச் சிறப்பு நாட்கள்

14—5—81 வியாழன் விஷ்ணுபதி புண்யகாலம். திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம். ரிஷபரவி 23-33, தருமை ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி மகோற்சவ அனுக்ஞை முதலிய பூர்வாங்கம்.

15—5—81 வெள்ளி தருமை ஸ்ரீஞானபுரீசுவரசுவாமி மகோற்சவ

16—5—81 சனி மஹாப்பிரதோஷம். [துவஜாரோஹணம்.

18—5—81 திங்கள் வைத்தீசுவரன்கோயில், ஆச்சாள்புரம் முதலிய இடங்களில் வைசாக உற்சவதீர்த்தம், பௌர்ணமி விரத பூஜை, மாதபூஜையில் சந்தனம் சாத்துதல்.

19—5—81 செவ்வாய், தருமை ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி சகோபுர ரிஷபவாஹனக் காட்சி. சீகாழியில் ஸ்ரீ திருஞானசம்பந்தருக்கு ரக்ஷா பந்தனம்.

21—5—81 வியாழன், தருமை ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கல்யாண வைபவம், வெள்ளிரதத்தில் ஏகாசனக்காட்சி. ஆச்சாள்புரம் ஸ்ரீ தோத்திரபூர்ணம்பிகைஉடனுகிய ஸ்ரீ திருஞானசம்பந்தருக்குத் திருக்கல்யாணம், இரவு மணி 4 க்குமேல் ஜோதிதரிசனம், ஐக்கியம், சீகாழி, காரைக்கால் தருமபுரம் முதலிய இடங்களில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் அபிஷேகம் - ஐக்கியம். திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மாகேசுவரபூஜை.

22—5—81 வெள்ளி, சங்கடஹரசதுர்த்தி.

23—5—81 சனி, தருமை ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி மகோற்சவ திருத்தேர்.

24—5—81 ஞாயிறு, தருமை ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி மகோற்சவ தீர்த்தம். தருமையாதீன ஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீ ஆதிகுருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை. மாலை இருபத்தாருவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருமூர்த்தங்களை வழிபடுதல். இரவு திருமெய்ஞ்ஞானப் பாவாடையுடன் குருபூஜை வழிபாடு. ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி துவஜாவரோஹணம்.

25—5—81 திங்கள், தருமையாதீன மடாலயத்தில் மாகேசுவர பூஜை. இரவு 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பட்டணப்பிரவேசம்.

28—5—81 வியாழன், அக்னி நக்ஷத்திர நிவிருத்தி 18-4.

31—5—81 ஞாயிறு, பிரதோஷம். மாதசிவராத்திரி.

1—6—81 திங்கள், வேளூர் மண்டலாபிஷேகக் கிருத்திகை. தருமபுரம் ஸ்ரீ சண்முகர் கிருத்திகை அபிஷேகம். கிருத்திகைவிரதம். போதாயன அமாவாசை.

2—6—81 செவ்வாய், சர்வ அமாவாசை.

6—6—81 சனி, சேக்கிழார் குருபூஜை.

7—6—81 ஞாயிறு, சோமயாஜியாகம். ஆயில்யவிழா.

9—6—81 செவ்வாய், திருக்கடவூர் முனிசுவரபூஜை.

14—6—81 ஞாயிறு, பிரதோஷம் மிதுனரவி 47-45.

---

தருமையாதீனம்

ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி



திருத்தேரில் உலாவருதல்

Printed & Published by V. Ramaiah Pillai, Manager, Dharmapuram
at the Gnanasambandam Press Dharmapuram, Mayuram. 10-5-81